ஓ மாயாவேடம் தரித்த புலையரே, கேளும் எந்த ஜாதியானாலும், எந்தமதமானாலும், எந்த குலமானாலும், அல்லது நாயை தின்னும் புலையனானாலும் "நான் ப்ரம்மம்," என்பதை அறிந்து இந்த மாயா உடலின் பிறப்பிடத்தை உணர்வாரேல் அவனே எனக்கு குரு! என்றார்.

இதை கேட்ட புலையர் தன்னுருவத்தை மாற்றி ருஷபாரூடமாக காக்ஷியளித்தார். உமாதேவியுடன் அந்தர் முகத்தில் கண்ட ஸ்ரீ சங்கரர் துதிக்கிறார்,

(சிதம்பரநாத—மெட்டு)

ப; ருஷபாரூடா — ருஷிஹ்ருத்வாஸா
மூஷிகவாஹப்ரிய சிவமாய் தோன்றின-ரு

அ-ப; ரூபமும் நாமமும்-கடந்தோய்
ரூபமாய்தோன்றி-அபயமளித்த —ரு

ச; யாவு முன்னையே அண்டிடுமே
தாவும் தாயை தேகமதில்கொண்டு
சமம்தந்திடவே-எனக்கு
தம்கருணைவள்ளலாய் தாளினைதந்த —ரு

நாமமும் ரூபமும் கடந்த உன்னை யாரால் அறியவேண்டும்! எனக்கு சிறிது சங்கை ஏற்பட்டதால், நீயே வந்து அந்த சங்கையை தீர்த்து அருள்கொடுத்தாய்! ஓ தயாநிதே! ரூபமில்லாத வஸ்து ரூபமுடன வருவதென்றால் அதை பார்ப்பவர்களுடைய கண்ணுவது உன்னுடைய கருணைக்கு பாத்திரமாகிறது அவரையும் உன்னைபோல, ரூபமில்லாத நிலையும், ரூபமுள்ள நிலையையும் காட்டி ஸமதவ நிலையை உணர்ததுகிறாய என்பதை உணர்ந்தேன். என்று துதித்து உமாபதியை நமஸகரித்து நின்றார்.

உடனே ஸ்ரீருஷபாரூடா! ஓ சங்கரா; நீயே, நான்; நானே நீ! உனக்கு எப்பவும் என் தியானமிருக்கட்டும் பின்னும் நாளை தினம் வியாஸரை தர்சித்து அவருடைய ப்ரம்மஸூத்திரத்திற்கு பாஷ்யம் எழுதுவாயாக! என்று திருவாய் மலர்ந்து அருளி மறைந்தார் ஸ்ரீமஹாதேவரை தாசித்த ஸ்ரீ சஙகரர் சிஷ்யர்களுடன இருக்கும் மடத்திற்கு ஆநநதத்துடன் வநதார்.

பகவான் ரிஷபாரூடமாய காக்ஷியளித்ததை தியானித்துக்கொண்டே வியாஸகாசியை அடைந்ததும், ஜனந்தனர் முதலிய சிஷ்யாகள் குருநாதரை நமஸ்கரித்து துதிக்கிறாகள்

(பூமியில மானிட—மெட்டு)

1. நீயே பரம் பொருளாக வந்து
நானே நேரில நவின்றிடவே
தானாக நாங்கள தனயராலேும் —நீயே

2. மோனாகாரம் முழுங்கியேநல
நிராகாரம் நிமலமதில
ஜஞானகாரம் விளக்கியே —நீயே

3 இயற்கை யாமிவவுடமபை கொண்டு
உலகில் வநது நின்றேமிதை
இதையறியவே எங்குள் சுப்ரமணியாய்
தோன்றினேய் -நீயே

இவவிதம் சிஷ்யர்கள் யாவரும் நமஸ்கரித்து நின்று, எஙகள் அந்த காரத்தை போகக இநத உருவம் கொண்டு, எங்கள் உள்ளத்தில் சுப்ரமணியைபோல விசி சுத்தம்

செயத பரம் பொருளே, உமககு சதா நமஸ கரிக்கிறோம், எனறு துதித்து குருகடாக்ஷம் பெற்றார்கள்.

சாநதி

எட்டாம அத்யாயம் முற்றிற்று

---

ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீசங்கர கீதை

---

## ஒன்பதாம் அத்யாயம்

ஸ்ரீ ஜனந்தனர் ஸந்தேக நிவர்த்தியும்
வியாஸா

அருள் பெறுதலும் !

இன்னொரு நாள ஸ்ரீ சஙகரர்; கங்கை கரையில் அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, சிஷ்யர்களுக்கு நாராயண நாமத்தின் பெருமையை உரைக்கிறார்.

(எல்லோரையும்—மெட்டு)

ப: நாராயணாவென்றொரு தரம்சொன்னால்
நாரியர் மயக்கம் தீருமே (நாராயணா)

அ-ப, நாரமுடல் நாற்றிசையுமோடுமிதை
நேராயுபவீதம—கண்டடக்கும்(நாரயண)

ச, ப்ரம்மாதியுலகம் சரீரமாகும்
ப்ரம்மதத்வாதீத மாகும்
ப்ரஹலாத நாரத ப்ரமுகர்கள்
நாராயணவென்று நறகதியடைந்தார்
(நாராயண)

நாரியா மயக்கம் திருவதற்கும், ஜீவனை பரமாத்மாவில் சேர்ப்பிப்பதற்கும், நாராயண நாமம் ஜபித்தால் மேன்மையளிக்கும்! என்று சொல்லி யாவரையும் நாராயணா! நாராயணா! என்று சொல்லுஙகள் என்ருர். அப்படியே நாராயண தியானத்திலமர்ந்து விட்டார் குரு நாதர். சிலது நாழிகை கழிந்ததும் யாவருக்கும ஆசீர்வாத வசனத்தை சொலகிருா

ப்ரம்மாதி உலகமெல்லாம எவனுடைய சரீரமாக விளஙகுகிறதோ, முக்தர்களில் உள்ளத்தில் எவனுடைய தேஜஸ் பரகாசிக்கிறதோ அந்த ஸ்ரீமன் நாராயண நாமத்தை ஜபித்து

வாருங்கள். என்று சொல்லி இன்னும் விளக்குகிறார்

(மோகனம விருத்தம்)

நாரமாம் தத்வததை கடததிடசெயயும்
போராய புரியும் பொாிகளையடககிடசெய்யும்
மொறணில்லாமல் மூர்த்தியாக்கிட செயயும்
பரம்காட்டி பறறில்லாதாககும் நாராயண
நாமம்

இநத திவ்ய நாராயண நாமமே எல்லா வித நாதங்களிலும மேலானது. ஆகையால் தத்வங்களை கடந்த நாராயண நாமத்தை சதா ஜபித்து வாருங்கள என்றார்.

அப்படியிருக்க பசித்து இளைத்து வநத ஓர் பிரமணர் குருநாதர் காலில வீழ்ந்து பசியை போக்குமென்றார். உடனே ஸ்ரீசங்கரர், தன் கமண்டலத்திலிருககும கங்கை நீரை, கையில் கொடுத்து சாப்பிட செயதார். அந்த திவய தீர்த்தத்தை உட்கொண்டதும அவ்வந்தணருக்கு பசியும தாகமும் ஒழிந்து

திவ்விய சரீரத்தை அடைந்தார். இதைகண்ட பிருமணா வியபுற்று " பகவனிடம் சோந்தால பசியும் தாகமுமிராதென்பதை உணர்ந்தார்." குருநாதரின் பாதகமலஙகளை பூஜித்து நமஸ் கரித்து ஆசி பெற்றுகொண்டு தன்னிருப்பிடம சோநதார்

ஸ்ரீசனந்தனருககு ஓர் சநதேகத்தினல் குறவனை கேழக்கலானர். ஓ என் சநதேகததை நீக்கும் அசிநதியரே, நமஸகாரம். தாங்கள் உரைத்த அருள மொழியை உணாநதேன் ஆனல் "மௌனம் எது வென்பதை அறிய விரும்புகிறேன் என்ருர்

இதைகேட்ட ஸ்ரீசஙகரர். என் அருமை சிஷ்யனுகிய ஜனந்தனு கேள்! சொல்கிறேன் நீ கேட்ட கேள்வி உண்மையான வசனமாகும்! ஏகமனதுடன கேள். அதாவது மௌனம் இரண்டு வகை உண்டு! முதலாவது ஜஞானி களுக்கே மௌனமாயிருகக முடியும்! அலலா தவறகு முடியாது அதெனனவெனறல் இந்த பஞ்ச பூதத்தால் ஏற்படும் கர்மேந்திரியமும்

ஜ்ஞானேந்திரியமும், இன்னும பல ஆணவ மான பூச்சிகளை எரிகக மௌனமென்னும் அக்நி உதவுகிறது ஆனபடியால் அஜ ஞானத்தை ஜயிப்பதற்கு முயற்சி செயயும் முனிகள், மௌனமாயிருநது நிதயம் அனுஷ் டானம் புரிநது வரவேண்டும்! அபபடி. பழகி னுல மௌனத்தின் முடிவை காணலாம்! இரண்டாவது என்னவெனருல, வேதாத்ய யனம் செய்து, வேதத்தின் உள் கருத்தை அறிநது உபநிஷத்துக்களாலும், பல மநதிரங் களாலும் போற்றப்படும் வஸதுவை அறிநது கொண்டு, பக்தாகளிடம "தததவமஸி என்ற மஹா வாக்யத்தை உரைத்து பலவித உப நிஷததுக்களை பாடி, மக்களை உபதேசமொழி யால் மனம களிபபடைய செய்தால நம் முடைய இந்திரியஙகளெல்லாம், அக்னியில் வீழ்ந்த கொசுவென எரிநது விடுகிறதினுல், இதுவும் இநதிரியங்களை மௌனப்படுதத உத வுகிறது. ஆகவே இரணடும் ஒன்றேயாகும். எநத மௌனத்தில எவனெவனுக்கு விருபப மேற்படுகிறதோ அதையதை அனுஷ்டித்து

உள்ளபடி மௌனத்தை உணர்ந்தால் மௌனியாவான். இந்த விஷயம் அறிந்து கொள்ள மிகவும் கஷ்டம்தான். அறிவை கெடுத்து பிறப்பு இறப்பை நாடும் ஆதமா வுக்கு இதை அறிய முடியாது ஆகையால் ஓ ஜனந்தனு! உனக்கு நீ பேசினாலும் நீ எப் போதும் மௌனமாய் இருப்பாய என்று ஆசிர்வதித்தார். இந்த திவ்ய வசனத்தை கேட்ட ஸ்ரீ ஜனந்தனர், சிலது நேரம் ஸதா னுவைபோல அசையாமல் நிஷ்டையில் அமர்ந்துவிட்டார். பின் கண்களை திறந்து பார்க்கவும், ஓஹோ "இதுதான் மஹாமௌன னம்? என்பதை தெளிந்து குருவை வலம் வந்து நமஸ்கரித்து சொல்கிறார்.

மூர்த்தியரை கடந்த மோனபொருளும நீயே, முக்தர்களுக்கு முதலவனும் நீயே! என் னுள்ளத்தில் ஆதித்யனாக இருந்து உடல் நரம் புகளை சுத்தம் செய்யும் பேரொளியும் நீயே! உனக்கு சதா நமஸ்கரிக்கிறேன. என்று உள் ளம் குதூகலமடைந்த ஜனந்தனர் புகழ்ந்து நின்றார்.

இவ்விதமாக ஸ்ரீசங்கரா சிஷ்யர்களுக்கு உடபதேசிககும் வேளையில் பராசரர் புத்திர ரான வேத வியாஸர் ஒரு கிழ பிருமணவேடம் கொணடு சங்கரரிடம வருகிருர்.

(நீமதிசலலகா--மெட்டு)

ப. ஸ்ரீபராசர புததிரர் பிருமணராக ஸ்ரீ
சஙகரரிடம வந்தார் —ஸ்ரீ

அ-ப; நாராயணு வென றுபாடி-நாராயணனை
ஆராயநதறிய வொருபாயம் கேழக -ஸ்ரீ

ச உபநிஷததாலபாடும வாககியம்
அபயமாய கேழகவே வந்து
உபயகுலதீபனுக உரைககும் வாக்கிய
கேட்டு

சபலமிலலாயந்தணர் ஸந்தஸாய
கேழ்க—ஸ்ரீ

இவவிதம் ஸ்ரீவேதவியாஸா பிருமண உரு வம்கொண்டு சங்கர முனிவரிடம் வந்தார். உடனே சிஷ்யர்களும் சஙகரரும பெரிய தாத் தாவை பார்தது ',இவர் தேவ புருஷர்போலும்

என்று சொல்லி யாவரும் நமஸ்கரித்து நின்றார்கள். மாயா பிருமணரும்மாணுக்கருடன்கூடிக் கொண்டு, ஓ அன்பர்களே, என் குருமார்களே, தெய்வமே உருக்கொண்டு வந்த தேவதைகளே, தெய்வத்தின் உருவத்தை விளக்கி காணப்பவர்களே, ஈசவர அம்சம் பொருந்தியவர்களே, நான் உங்களிடம் சில கேள்விகளை கேட்டு தெரிந்துக்கொண்டுபோக லாமென்று வந்திருக்கிறேன். ஆகையால் உங்களை போல நானும் ஓர் சிஷ்யன். என்னை புகழ்ந்து நீங்கள் நிறபதுகூடாது, உட்கார்ந்து நான கேழகும் ஸந்தேகத்தைதீர்க்கவேண்டும்! ஓ சங்கர முனிவரே கேளும்

(நொண்டிசிந்து)

அவதாரபுருஷாததமா-கேளீர்
தவமாய் கூடிஅடியாரை-தானுய்
ஆட்கொள்ளும் ஆதியோய
திடமாகவே வநதாய்-சங்கரா நீ
இன்னும் பல சூத்திரங்கள் இருக்கிறதே
அதையும்படித்தறிந்தால-முனசொன்ன

அநந்தஸாமி குருவாக்கியமதாநே யது
எது வென்றுகேழுபாயேல-திவ்ய
வியாஸரின ஸூத்திரமதானது
அதறகு பாஷ்யம தெரியவோ இஙகு
தடியால ஊன்றிவநதேன்—அய்யநே
தடியால் ஊன்றிவநதேன் (அவதார)

இநத திவய வசனங்களை கேடடதும் ஸ்ரீசங்கர முனிவர், தாத்தாவின சநதேகத்தை தீர்க்கும்படி செய்கிறதாக வெண்ணி, சொல்கிறார் ஓ பிருமணோத்தமா, உங்களுக்கு வியாசஸூத்திரத்தில் என்ன சநதேகமிருககிறதோ அதை கேளும் அறிந்தமட்டும அவரருளால் சொல்கிறேன் எனறார மாயா பிருமணரும், ஓ சங்கரா; "தததநதிர பரதிபதனதை !" என்ற ஸூத்திரத்திற்கு உரை சொலலவேணடும!' என்றார் இதைகேட்ட ஸ்ரீசங்கரா! சநதிர ஸூரியர்களும மறறுமுள்ள தேவதைகளும் எந்த ப்ரதிபிமபத்தால் சோபித்து அவரவருடைய தொழில்களை செயவிககிறதோ, எது, எல்லாவறறையும் இதல்ல! இதல்ல! என்று

தள்ளி தள்ளி கொண்டே போனபிறகு நிச்சல மஹாமௌனமா யிருக்கிறதோ அதுவே யாகும் என்று உரைத்து இன்னும் பல கௌதமர் ஜைமினி என்ற கர்ம அனுபவங் களை எடுத்து காட்டி பல சுருதிகளை ஆயிரம் தடவை கூறி விடை அளித்து மாயா பிரு மணரை ஆநந்திக்க செய்தார்.

ஆநந்தமடைந்த மாயா பிருமணர் வியாஸ ருடைய உருவம் பூண்டு சொல்கிறா அப் பனே சங்கரா; நான் செய்த ஸூத்திரங் களுக்கு இப்போதுதான் மகிமை வந்தது. அதற்கு அர்த்தம காணுத விப்ரர்களுககு உண ரும்படி செய்தாய்! "ஓ வியகயான சிங்கமே, நீயே ஷட்தர்சனு ஸ்தாபனுசாரியன்! நீயே லோகாசாரியன! நீயே சர்வ தநதிர சுதந்திரா சாரியன்! இநத நானகு பேரும் நீ கயிலேககு போகும்போது ப்ரம்மாவானவர் புகழ்ந்து, நீயே ப்ரம்மமாக ப்ரகாசிப்பாய-என்று திரு வாய் மலர்ந்து அருளி, இன்னும்சொல்கிருர். உனனுடைய குருபரம்பரையும் லோக குரு

வாக இருக்கக்கடவது இல்றைக்கு உனக்கு பதினாறும் வயதான படியால, உன ஆயிஸ¬ முடிவு பெறுகிறதாக வெணவி யமன் வராத படி உனனை காப்பாறறும்படி, என் யோக வலிமையால் இன்னும் பதினாறு வயது தந் தேன. என்று அருளி கமண்டலததிலிருக்கும கஙகையை ஸ்ரீசஙகரருடைய திருமேனியில் அபிஷேகம் செய்தார். இநத ஆநநதமானது சச்சிதாநநதஜோதி கடலில் தன்னுடையஅவய வம் முழுதும் கரைத்ததபோலுள்ள சமாதி சுகத்தை அடைநதார் பரமஹம்ஸ ஸாம் ராஜயத்தில் அழுந்திவிட்டால் திருமூர்த்தி களும் தேவகணங்களும் வந்து ஆசீர்வதித்து அவதாரபுருஷராக்கி விடுகிறார்கள். அப்படி யிருக்க யமனைபோல எததனையோ எமனை கண்டவர்களுக்கு இந்த யமனை ஜயிபபதற்கா முடியாது? பாரத்தால எட்டு கறணம் போட்டு பாதகமலங்களை ஆச்சித்து விட்டல் லவோ போவான்? அந்த திவ்ய உடலிலிருக் கும் உயிரை எடுக்க அவனால் முடியாது என் பதை நாம் அறியவேண்டும்! சமத்வம்

கொண்ட ஸ்ரீசங்கர பகவானுக்கு அபிஷேகம் செய்ததும், உடனே ஆகாயத்திலிருந்து "ததாஸ்து! என்று அசரீரிகேட்டது வியாசர் மறைந்தார். இந்தப்படி தன் வாக்விலாசத்தாலும் யோகவலிமையாலும் மரணத்தை ஜயித்த ஸ்ரீசங்கர முனிவர் ஸாக்ஷாத் ஸ்ரீமார்க்கண்டேயர் போல பரகாசித்தார்.

சாந்தி

ஓம் தத ஸத்

(ஒன்பதாம் அத்யாயம் முற்றிற்று)

---

ஸ்ரீசுப்ரமண்ய ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீசங்கர கீதை

## பத்தாம் அத்யாயம்

### ஸ்ரீ ஜனந்தனருக்கு பதமபாதர் என பட்டமும கயிலை சென்றதும்

அப்படியிருக்க ஒருகாள், தன் ப்ரிய சிஷ்யரான ஜனந்தனரிடம் பொருமை கொண்ட சிஷ்யர்களை அடக்கவேண்டி, ஜனந்தரின் பெருமையை காட்டவேணடுமென்று திருவுள்ளம் கொண்டார்.

ஒருநாள் யொருபொழுதாகிலும்—மெட்டு)

ப; ஒருனாள் சனந்தனர் பூவெடுககும்போது
குறவனைமைத்திட (ஒரு

அ-ப. மறுசொல்லிலலாமல ஹரன்மலரடி
பணிந்து
மகிழுமாணுக்கன் மாதேவர்பாதம்
நினைந்து (ஒரு

ச; தண்டு கமண்டலமாக கஙகையில்
சாடினதில்
அருமையான மலர் விரிந்ததைக்கண்டு
உள்ளம மோகம்கொண்டு-உமாபதியின
வள்ளமதில் நடந்து-விமலரிடம்
வலம வந்து அஷ்டாங்கம் பண்ணி
நின்றார்—(ஒரு

பூவெடுப்பதற்காக அக்கரைக்கு ஜனந்த னர் போயிருப்பதைகண்டு, சங்கரர் இக்கரை யில நினறுககொணடு சிஷ்யாகள் காணவே, ஓ ஜனநதனு! வா; என்று அழைத்தார். குறவர் வாக்யம கேட்டதும குருபக்தியுள்ள ஸ்ரீ ஜனந் தனர், சரீரத்தையே ஸ்ரீசங்கரருக்கு அற்பண மாக தொழிலை செய்து வருகிறதினுல், உட னேயே கஙகையில்குதித்து ஓட கருதி, கங்கை யில் குதிததார் உடனே ஒவவொரு பாதத்

திற்கும் ஒவ்வொரு தாமரை புஷ்பம் தோன்றி, பாதத்தை தாங்கி கரைகடந்து குருவிடம் ஓடிவந்தார். ஸ்ரீமன் நாராயணரின் அம்சமென காட்டுதற்காகவும், குரு வாக்யத்தில் நம்பிக்கை வைத்ததினாலும் கங்கா ஜலத்தைத் தாண்டி வந்தார். இந்த ஆச்சர்யத்தை பார்த்து கர்வமடைந்த சிஷ்யர்கள் யாவரும் படிந்து நமஸ்கரித்து பொறாமையை தீர்த்து சாந்தி அடைந்தார்கள். பின் சனந்தனர் குருநாதரின் பாதகமலங்களில் வீழ்ந்து சொல்கிறார், ஓ அருள் குருநாதரே, தங்களிடமிருக்கும் ப்ரேமையினால் கங்கை கடந்துவந்தேன். எப்பொழுது நம்முள் ப்ரவாஹத்தில் மூழ்காமல் குருகடாக்ஷத்திற்கு ஆளாவோமோ அப்பொழுதே நம்முள் திவ்ய சக்தியை கொடுத்து பரம்பொருளாக்கிவிடுவது நம் குருவின் ஆணையாகும். ஆகையால் சிஷ்யர்களே; நீங்கள் பொறாமை கொண்டாலும் அதை தீர்த்து சாந்தியை காண்பிக்கும் பொருட்டு இந்த லீலை நடந்தது கருணையினால் அன்றோ? நம்குரு மும்மூர்த்திகளையும் கடந்தவர் என்பதை

ஸ்ரீசனாதனருக்கு பதமபாதர்எனப்பட்டம் சூட்டி மஹா விஷ்ணுவின் அம்சமென கொண் டாடி புகழவே, அதற்கு பத்மபாதா, நான் அத்தனைக்கு பெரியவனா? என் குருநாதரே! என்று சொல்லி காலில் வீழ்ந்து சாந்தி அடைந்தார். நீ குருவை தெய்வமாக கருதி னால் அது உன்னையும் தெய்வமயமாக்குமென்ப தை தெளிவாய் உணர்ந்து கொள்ளலாம்! இவ் விதமாக அதிக நாட்கள் சகல துடன் காசியில் ஸ்ரீசங் கர முனிவர் சிஷ்யர்களுடன் வாஸம் செய் தார்.

நம பார்வதிபதேய

ஹர ஹர மஹாதேவா

மக்கள் படித்து நற்கதியடைய வேண்டு மென்று உண்மை கொண்ட சங்கரர், பல நூற்களையும் ஸூத்திரங்களின் பாஷ்யங்களை யும் இயற்றிவிட்டு தேசாடனத்திற்கு பிரயா ணமானார்,

(காம்போதி - விருத்தம்)

கத்தாகத்த சோபன சங்கரர் தேசாடனம் செய்ய

சுத்தாந்தராம் சனந்தனர் முதலோருடன
சார்பாக
சித்தாந்தமாம் சிகரத்தில் விளங்கும் சித்கலே
நாதனை கூட
பத்தவதாரமும்காண பரனிருக்கும் கயிலே
செல்ல

கைலாஸ மலேக்கு போக நினைத்து கொண்டு, காலபைரவா, விச்வநாதர், தொண்டு கணபதி முதலிய மூர்த்திகளை தர்சித்து ஆசீ பெற்றுக்கொண்டு பராசக்தியின அம்சமான ஸ்ரீ அன்னபூரணியிடம பூர்ண பிக்ஷையை கேழ்க லானார்.

அம்மா தாயே நீ விசவநாதநுக்கு எந்த பூர்ணபிக்ஷையை கொடுததாயோ, அந்த பிக்ஷையை அருளவேண்டும்.

(ரகுவமாஸகா மெட்டு)

ப; பிக்ஷாம்தேஹியம்ம-பூர்ணதேவிநீ
குக்ஷியை யடக்கும் குருமூர்த்தினி —பி

அ-ப; பக்ஷிராஜன் வாஹ லோதரீநீலோ
லாக்ஷ்மபிக்ஷையருள் த்ருதாபஹாரிநீ —பி

ச, குங்கும வர்ண ஸ்வரூபிணி நீயே
தங்க ஜனனீ தனயனை காக்கும்
மூரலி மோகினி மூர்த்தி ஸ்வரூபிணி
பராபர பிக்ஷை யருள கயிலை செல்ல —பி

ஸ்ரீசங்கரர் ஸ்ரீ அன்னபூர்ணியிடம் பூரண பிக்ஷையை கேட்கவே, "என பிக்ஷை உனக்கு எப்போதும் இருக்கும்!" என்று அசரீரி கேட்டது. உடனே ஸாஷ்டாங்கம நமஸ்கரித்து ஆசிபெற்று சிஷ்யகோடிகளுடன் கயிலைக்கு புறப்பட்டார்

ஓம் நம பார்வதிபதயே
ஹர ஹர மஹாதேவா

(மோகனம் - விருத்தம்)

மணிகர்ணிகை முக்த்தலங்களொடு மூர்த்திகளை
யுணர்ந்து
அணிவர்ண மாலைகோர்த்து அமலமாயணிந்தும்
பிணியாயுழலும் பக்தர்களுக் கனிதமாயுரைத்
தும் பணிகளோடும் மலையை பார்க்க வந்தார.

ஸ்ரீசங்கரமுனிவா சிஷ்ய கூட்டத்தாருடன் காசியை விட்டதும், இந்திர ப்ரஸ்தம், மதுரை

ஹரித்துவாரம், பரம்மகபாலம், ஆரியவர்த்தம இன்னும் பல திவ்ய இடங்களிலுள்ள, பற்பல மதாசாரியர்களை கண்டு, வாதம் செய்து அத்வைதமதமே சிறந்ததென விளக்கி, பலவித பரீக்ஷைகளும் செய்து ஜயம பெற்று, ஆங்காங்கே பல ஆசாரியர்களை சிஷ்யர்களாக்கி கொண்டார். பின்னும் சனந்தனர் முதலிய மாணாக்கரோடு, சோமநாதம, துவாரகை, வடமதுரை, கோகிலம் முதலிய விஷ்ணு பக்தர்களைகண்டு வாதம செய்து வெற்றியடைந்து, சண்டமாருதத்தை போல சோபித்தார்.

பாஸ்கரபட்டர், பூஜ்யபாதர் முதலிய தேவி பாகவதர்களையும கண்டு அவரிடமும் பல வாதங்கள புரிந்து, சகுண நிற்குண உபாசனையை விளக்கி, யார் யாருக்கு ஏதேது செய்தால் நற்கதியை அடைவார்களோ, அதையே தான் அறிவிற்கு எட்டும்படி அத்வைத ஸ்வரூபமாக உரைத்து யாவரையும் பிரமணர்களாக்கி கொண்டும், அங்கே ஒவவோர் க்ஷேத்திரங்களை சமைத்தும, சனாதன தர்மத்தை

யாவருக்கும் போதித்து கொண்டும், சனந்தனா முதலிய ஆசாரியர்களுடன் பகவான் சங்கரர் கயிலையை அடைந்தார். கயிலை நாதனை தரிசித்து ஆநந்தத்துடன் ஸாஷ்டாங்கம் பண்ணி தன்னை மறந்து மனோமயமாக பாடுகிறார்.

(நாத நாமக்ரியா - மெட்டு)

ப, லிங்கோத்பவனே-நானுனையடைந்துள்
வமபூரிக்க-லி

அ.ப; மங்களமேசதா மூவருந்தோன்றியுள்-லி

ச சத்ய லோகவாஸனே சாதுஜனப்ரியனே
சிதயமானபோதனே-சிதவிலாஸம்
பரனே—லி

ஸ்வயம் ப்ரகாசனே சிவ ஸ்படிகநிர்மலனே
நிலாதோன்றி நானுனையடைந்துளளம்
பூரிக்க—லி

ஓ கைலாசநாதா ஆகாய நிர்மலாநும் ச்படிகலிங்க ச்வரூபனே ச்வயம் பரகாசனே. அடியார் சித்தலையில் வாஸம் செய்பவனே, உன்னை எங்கும் பார்த்து நமஸ்கரிக்கிறேன். அருள்க!

அருள்க! என்று சொல்லிக்கொண்டே நிஷ்டையில் அமர்ந்து விட்டார் இதை கண்ணுற்ற பத்மபாதர் முதலான ஆசாரியர்களும் த்யானத்திலமர்ந்து விட்டார்கள். இப்படி மூன்று நாள் கழிந்தது ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா கோவர்த்தன கிரியை குடையென பிடித்து கோபிமார்களை காத்ததைபோல், நடசங்கர பகவான் சிஷ்யர்களுக்கு பசியும் தாகமும் இல்லாதபடி செய்தார் நக்ஷத்திரங்களால் சோபிக்கும் சந்திரனைபோல, நிஷ்டை கலைந்து கைலாச ஸநாதனுகிய வெள்ளி மலையை பார்த்து இன்னும் துதிக்கிறார்.

(பைரவி - ஆதிதாளம்)

ப, நீயே எந்தருபமுமாவாம்.நான் நேரில
கண்ட—நீ

அ-ப; நீயே முககுறியில் தானுய் தோன்றவே
வாயேன் வரத வாரணருடமாக —நீயே
உனைவிட்டு செல்ல மனமில்லை
தன்னை சோத்து மென் சொல்லை
பற்பலவினைகளை போக்கிடவே யுன்னை
நற்கதியென வுன்பாதமடைந்திட—நீயே

கைலாஸநாதனை துதித்து அவ்விடமிருக்குர் மானஸ ஸரஸில நீராடி அவ்விடம் விட்டு வேர மனமில்லாமல் பின்னும் துதிக்கிறார்.

(காமபோதி . விருத்தம்)

நீயே பரமபதமென நிறகுணர்போற நீயே நாநெவகண்ட நிமலனடியார்க்கும் தாயிக்கும் கருணை வளளமாக-தோன்றுவாய மாயிகைவே இருளை

ஸ்ரீசங்கர பகவான் துதிப்பதைக் கேட்ட கைலாச நாதா, நீயே நான், நானே நீ! பாஷ்யங்களையும் தத்வங்களையும் நற்மகளுக்கு எடுத்துரைத்த, தாமஸவரூபா, உனக்கு என் அருள் பூர்த்தியாக இருக்கிறது என்று அவ் விலிங்கத்திலிருந்த அசரீரி கேட்டதும் பூமாரி பொழிந்தது. உடனே மலர்ந்த முகமுடைய ஸ்ரீசங்கரர், கைலாச நாதனை மனதில் தியானித்த கொண்டு கேதாரம் முதலிய இடங்களை தரிசித்து பத்ரிகாச்ரமம் அடைந்தார்கள்.

## பத்தாம் அத்யாயம் (முற்றிற்று)

ஸ்ரீசுப்ரமண்ய ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீசங்கர கீதை

---

## பதினொரம் அத்யாயம்

அஷ்டாங்க ப்ரதிஷ்டையும், அக்னிகுண்டம்
சமைப்பதும், ஹரித்வாரம் அடைந்ததும்
ஸ்ரீ சங்கரர் பத்ரிகாச்ரமம் வருகிறதும்

(சிதம்பரநாதா—மெட்டு)

ப, பத்ரிநாதா பக்தனென் மேல் வாதா
சித்தமறிந்திடவா-திருவடியிணையை
நம்பி—(பத்ரி

அ.ப; முத்தரும்பலரும்-உன்னையே
பக்தியெனபாடி பரமனையடைந்திட —ப

ச; யாவும் முன்னேயே துதித்திடுவாரே
தாவும தன்னையனும் தாளினைகாண
பணிகளாடும் மலையில்-பார்த்திட
அணியாக காண அடியனுக்கருளே —ப

ஆனந்தத்துடன் பதரிகாச்ரமம் அடைந்தார். அவ்விடம் ஆனந்தம் விளம்பி சச்சிதானந்த அமுத பெருக்கில் கரைந்து சமாதியில் பூர்ந்தி, சிலது நேரம் கழித்து கண்களை திறந்து நினைக்கலானார். இவ்விடத்தில் தான் நர நாராயணர்கள் தவம் பெற்ற இடமாகும். இந்த திவ்ய ஸ்தலத்தில் தியானத்தில் அமர்ந்து நிஷ்டை கூடுவதற்கு சுலபமாக முடியும். ஓ பெரியோர்களாகிய நர நாராயணர்களுடைய பாததூளிபட்ட இடத்திலே நம்மை போன்ற எளியவன் வந்தால் தெளிவுடையவனாய் மாறி விடுவான். பூவுலகில் மக்களை காக்கவே நரனாகவும் ஜனித்து நாராயணருடைய சக்தியினாலே ரக்ஷிக்கப்படும் வருகிறதினால், "நாராயண வலலால் நரனும் நரனுடைய உபாஸனைதைவம் நாராயணனைதும்! இப்படி

நாராயணனுடைய சிஷ்யரான நரனை மக்கள் புகழ்ந்து பாடும்போது நாராயணனும் திருப்தி அடைகிறார். ஆகவே பக்தர்களை துதிக்கும் போது ஈச்வரன் எளிதில் அகப்படுவார்!" என்பது நனகு விளங்கி கண்டேன். ஓ பராசக்தியை தாங்கும் நரநாராயணமூர்த்திகளே! உங்களுக்கு ஸதா நமஸ்கரிக்கிறேன் என்று மனதால் துதிக்கும் ஸ்ரீசங்கரருடைய வாக்கியத்தை கேட்டு நரநாராயணர்கள் தோன்றி காக்ஷியளித்து ஆசீர்வசனமும் கூறி மறைந்தார்கள் உடனே அவ்விடத்தில யோக நாராயணரை அஷ்டாங்க ப்ரதிஷ்டை செயய உள்ளம் கொண்டு சொல்கிறார்.

(எந்தனிடது—மெட்டு)

1. யோகமுடனுள் கண்டபடியேவோர்
யோகநாராயணரை அமைத்திட எண்ணி
யோகியற்கு யாகமதை காணபிக்க
மோகிக்கும்படிவோர மூர்த்தியை
வைத்தார் —யோ

2, சீலமுடனே யாவரும் சேவித்திட
கோலமாகவே நின்று கோயிலுள்ளே
பாலனிவனென்று யாவரும் புகழ்ந்திட
பாலனாக வந்து ப்ரதிஷ்டைசெய்ய —யோ

யோகிகளால் தேடக்கூடியதும் யோகசித்தியை கொடுப்பவருமான யோக நாராயணரை வெகு அழகாக ப்ரதிஷ்டை செய்தார். இதை கண்டுகொண்ட ஸ்ரீ பத்மபாதர் தன் குருநாதரை நோக்கி சொல்கிறார்.

(வினதாசுத—மெட்டு)

ப; பத்ரீகாச்ரமம் பார்க்கவே வரும்
பக்தருக்கு • பாதம கிட்டுமய்ய —ப

அ. ப, சித்தருலாம் செங்கமலர்காண
முத்தாயருளும் மூர்த்திஸற்குருவை —ப

ச; பற்பலவே நடந்தே வந்திடுவதற்கு
நற்கதியென நாராயணனை கூட
இறைவனாகவே திறவுகோல்தந்த
குறவனாக நின்று நமக்களுக்கருள—ப

தமது குருவாகிய ஸ்ரீ சங்கரரும் யோக நாராயணரும ஒன்றேதான். இருவரி லு யாரை தொழுது வழிபட்டாலும ஈச்வரன் கருணை கூர்ந்து அருள கொடுப்பார் பகவா னுடைய கேள்விக்கு சங்கரரும், சஙகரருடை கேள்விக்கு பகவானும் விடை அளிக்கிறாகள். என்று குருவே தெய்வமாக கொணடு பூஜிதது வரும் ஸ்ரீ பதமபாதர் துதித்து அஞ்சலி புரிந தார் இதைகேட்டு உளளம பூரித்த ஸ்ரீ சங்க ரரும யோக நாராயணருக்கு அபிஷேகம, அலஙகாரம் பூஜை முதலிய நிவேத்யங்களை யும் வைதிக பூர்வம செய்து கொணடு யோக நாராயணரை பார்தது சொல்கிறா

(கரகரப்ரியா—விருத்தம)

நறகதிதரும நறசெலவமதரும் நறகுலம்தரும்
பறபலவினைவை பாரிலுமுலாமல் பாதம
சேற்கும்
இகபரமும கடநத இகபராதீதரே ஈசா.
வெனறு
யோகநாரணம யாகமுடன் காட்டியருளும்

பார்த்து சொல்கிறார். "இந்த தடாகம் அக்னி குண்டமாயிருந்து இவ்விடம் வருபவர்களுக்கு குளிர் நோயை போக்கக் கடவது!" என்று திருவாய் மலர்ந்தருளவே, அன்று முதற் கொண்டு அந்த தடாகத்திலிருக்கும் தீர்த்தம் குளிர் நோயை போக்கும்படியான உஷ்ணத்தை வைத்துக்கொண்டு எப்போதும் கொதித்து கொண்டே இருக்கிறது. இன்றைக்கும் குரு நாதர் அருளிய அக்னிகுண்டத்தை, அதாவது தப்த குண்டமென வழங்குவதை கண் கூடாகவே பார்க்கலாம்.

இதை கண்டுகொண்டிருந்த சிஷ்யர்களெல்லாம் ஆச்சர்யம்! ஆச்சர்யம்! என்று சொல்லிக்கொண்டு "பகவானே இவ்விதம் கோலங்கொண்டு பக்தர்களை காக்க வந்தார் போலும்!" என்று சொல்லிக்கொண்டே ஸ்ரீ சங்கர பகவான் காலில் வீழ்ந்து அஞ்சலி புரிந்து கொண்டு சொல்கிறார்கள்.

(ஷண்முகப்ரியா—ஆதிதாளம்)

ப, ராஜயோக சிரேஷ்ட-னே-ஸ்ரீ சங்கரா-ரா

அ. ப: ராஜராஜயோக எதிராஜஸிம்ஹா -ரா
ச: வீரவாத சிரேஷ்டா வரகுணசீலா
சூரசைவகுண ஸந்தத பாலா
நிர்குணோபாஸநே-ஷண்முகப்ரியநே
சுரமாதிகபார கற்பக நிலயே -ரா

ஸ்ரீ சங்கரர் சிஷ்யர்களின் துதியைக் கேட்டு யாவருக்கும் அபயம் அளித்து யோகநாராயணரிடம் விடை பெற்றுக்கொண்டு, அங்கங்கே பல ஸ்தோத்திரங்களையும் செய்து ஹரித்வாரம் அடைந்து, ப்ரணவ ஒலியைக் கொண்டு குதூகலத்துடனே, கங்கையில் ஸ்நானம் செய்து நித்ய அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு நிற்கையில், அவ்விடம், எதிரில், அறிஞர்களும், புலவர்களும், கவிகளும் உபாஸகர்களும் இருப்பதைக் கண்டு ப்ரஸங்கம் செய்யலாயினர்.

ஓ பக்தர்களே; பெரியோர்களே; கேளுங்கள் உங்களைக் கண்ட போதே எனக்கு, என்னை அறியாமல் சில வாக்யங்கள் வருகிறது அதை தெரிவிக்கிறேன்! கவனமாகக் கேளுங்கள்.

அறிஞர்களே, என்றுரைத்து அருள்மொழி களை பேசலாயினர் இந்த தேவ பிறவியிலும் மேலான மனித பிறவியை முன் தவத்தால் பெற்று நற்கதியடைய மனிதனுருவமாக வந்தோமென்பதை அறிவோமானால், அப்போதே நம்முடைய அவித்தையை நசித்து வித்யா தேவி உதிப்பாள். பின் படிப்படியாக மோக்ஷ ஸாம்ராஜ்யத்திற்கு படியேறி மலையை அடைவதுபோல அடைவோம்!' இதற்கு எடுத்துக்காட்டாக சொல்லவேண்டுமானால் என் சரித்திரமே உங்கள் சந்தேகத்தை தீர்க்குமென்றார் இதைக் கேட்ட விச்வநாத பட்டரென்ற ஒருவர் நினைக்கலாயினார் இந்த யுகங்களெல்லாம் எப்படி வந்தது? இவரிடம் கேட்ப்போமா? என்று நினைக்கவே, உடனே ஸ்ரீ சங்கரருடைய உள்ளம் எங்கும் நிறைந்திருக்கிறபடியால் யுகதர்மங்களை பற்றி ப்ரஸங்கிக்கலாயினர். டார் இவ்வளவும் நினைத்தாரோ அவர் முகத்தைப் பார்த்து பேசலானார்.

ஓ அன்பர்களான முனிவர்களே! கேளுங்கள் இந்த யுகதர்மங்களை அறிவதென்றால் அவ்வளவு சுலபமன்று. அத்வைதத்தை உணரகூடியவனே யுகங்களை அறிவார்கள். இந்த நாலுயுகங்களும் ஈசவரனிருக்கும் மலைக்கு நாலு படிகளாகும்! அதாவது முன் இந்திரியங்களின் வாஸனையால் மனித உடல் தரித்து ஜநநா லேற்படும காமக்ரோதாதிகளை கோர்த்துக்கொணடும, தாயின வயிற்றில் நின்று வந்த போதே இந்திரியங்களான மாயை மூடி தலைவனை காணுமல் இருப்பவர்கள கலியுகத்திற்கு சேர்ந்தவர்களாகும்! பின் அதை போக்கி பரிசுததமடைய உபாயமென்ன? என்று சிந்தையுடனிருந்து, நாமோச்சாரணத்தால் பாடி, ஒரு குருவைநாடி கவியின் ஆவேசத்தை அடக்கிக்கொண்டு, ஸகுணோபாஸனை புரிந்து வருவது துவாபர யுகததிற்கு சேர்ந்தாகும்! ஸகுணோபாஸனையினுல் "தானெவன! என்று நினைவு வரவே, லோகோபகாரம் செய்வது நல்லதென்று உள்ளம் இளம்பி தொண்டு புரிவது த்ரேதாயுகததிற்கு சேர்ந்ததாகும்.

யாக ஞானமும், பரோபகாரமும் கைக்கூடின
பிறகுதான் த்யான யோகம் கிட்டுகிறது. த்யா
னத்தை அடையும்போது கிரேதா யுகம் விளங்கு
கிறது. இந்தப்படி காமக்ரோதாதிகளை அடக்கி
ஸகுணோபாஸனை செய்து, யாக யஜ்ஞம் கூடி,
த்யானம் கிட்டின பிறகு, யுகங்களை கடந்த அத்
வைதம் விளங்குகிறது என்று திருவாய்
மலர்ந்தருளி, பின்னும் ஸகுணம், நிர்குணம்
என்ற வாக்கியங்களை உணர்த்தியும், "தத்த
மஸி! என்ற மஹா வாக்கியத்தையும் உரைத்து,
யார் யாருடைய உள்ளங்களில் எந்தெந்த ஸந்
தேகமிருக்கிறதோ, அதற்குத் தக்கபடி
உள்ளங்களை கண்டு பிரஸங்கித்தார்

இதைக்கேட்ட அரசர்களும் எதிரிகளும்
"ஈச்வரனே இவ்விதம் வந்தார் போலும்!"
என்று எதிராஜருக்கு - ஜெய! ஸ்ரீசங்கரபாத
ருக்கு - ஜெய! என்று கோஷித்து, புஷ்பங்களை
யும் ஹாரங்களையும் போட்டு நம் குருநாதரு
டைய பாதகமலங்களை பூஜித்தார்கள். யாவரும்
கண்சிமிட்டாமல் ஸ்ரீசங்கரருடைய முகஸேவை

யையே செய்தார்கள். இதைக்கண்ட பத்மபாதரும் குருவை வலம் வந்து நமஸ்கரித்து குருநாதருடைய வாக்கியத்திற்கு பாஷியங்களைப்போல உரைக்கலாயினார்.

குருவை நடபிறவில் கைவிடமாட்டார். நிரந்தரம் உள்ளத்தில் கண்ட ஆனந்தத்தை கைவிடாமல் மறவாதிருக்கச் செய்வது குருவின் கடாக்ஷமாகும்! ஜீவதயவாக இறைவனைக் கூடி, மறைகள் முழங்கும் வேதாந்தப் பொருளை காண அத்வைதமே மேன்மை தருமென்பதை நாம் அறிந்து, அனுதினமும் ஓயா முயற்சியால் பரமனைக் கூட வேண்டுமென்றார்.

இவ்விதம் பற்பல உபதேசங்களை செய்து கொண்டு நேப்பாளம், கானபூர், லெக்னோ முதலிய இடங்களிலும் பிரசங்கித்து, மக்களை நல்வழியில் திருப்பி, அத்வைதக் கொடியை நிலை நாட்டி பிரயாகை அடைந்தார்.

சாந்தி

(பதினோராம் அத்யாயம் முற்றிற்று)

---

### ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீ சங்கர கீதை

---

## பன்னிரண்டாம் அத்யாயம்

*ஸ்ரீபட்டபாதரின் நற்கதியும் - மண்டன மிச்ரரிடம் வாதிடலும்*

பரயாகையில் வடவிருக்ஷத்தினடியில் சிஷ்யர்களுடன் உட்கார்ந்துகொண்டு திருவேணியை பார்த்து சொல்கிறார்.

(எந்தனிடது தோளும—மெட்டு)

1. கைபிலைவிட்டு குதூகலமாய்வாரும்
அய்லையெனவே முழங்கும கங்கையும்
நீலமாயோடும் நிர்மலய முனையும்
அலையில்லா பரம சாந்தியுடன —கை

2 அந்தர முகமான யமுனை ஸரஸ்வதியும்
சுந்தரமாகக் கூடும் ஜோதிலிங்கமதில்
சுடரெனயாடும் சேவடி நிழலும
வடவிருக்ஷத்தை வலம்வரும் தீர்த்தம்
கண்டு —கை

கைலாஸத்தைவிட்டு அதி குதூகலத்துடன் இடி முழங்குவதைபோல வரும் கங்கையும், சுத்த நீலமாகவரும் யமுனையும் சாந்தியாக கூடியும், வெளியில் காணாது ஸரஸ்வதி ப்ரவாஹம அந்தர முகத்திலுமாக, திருவேணி ஸங்கததில சேருவதை கண்டு உள்ளம் பூரித்த ஸ்ரீசங்கரர் வடவிருக்ஷ நிழலில உட்கார்ந்தார்.

அப்படியிருக்க, அவ்விடம் ஸ்ரீபட்டபாதா முன் செய்த கர்ம வினையை போக்க, உமியை கூட்டி நெருப்பு வைத்து அதில் பிரவேசித்து சிவலோகம் அடைவதாக எண்ணின பட்டபாதரின செய்கையை, தன் தியான நிஷ்டையால் அறிந்த சங்கரர், பட்டபாதா இருக்கும் இடத்திற்கு சிஷ்யர்களுடன் ஒரு நொடியில் வந்து, அக்னியில பிரவேசம்செய்ய வல்ம்வந்துகொண்

டிருக்கும் பட்டபாதரை நோக்கி ஸ்ரீசங்கர முனிவர் சொல்கிறார்

(ஷண்முகப்ரியா—ஆதிதாளம்)

ப. ஏனிந்த கொடுவிருதம பட்டபாதரே
யுமக்கு —ஏ

அ.ப. தானிந்த மொழிகாண - தாறுய தெரி
வித்த - இந்த —ஏ

ச. ஏதாகிலுமிப்படி செய்யலாமோ
மதாபிமானங்கள் கொண்டாலுமென்ன
நாதாநந்தப்பெருக்கை நாடி மேல் சென்று
போதங்களைப்போக்கி பரமறியப்போரா -ஏ

ஓ பட்டபாதரே, ஏனிப்படி கொடுமை விரதத்தை கொண்டிருக்கிறீர். மதங்கள் எத்தனையோ வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கும்! அதில நாம் பற்று வைக்காமல் நம்முடைய அத்வைத மதத்தையே நாடுவோமானால் அற்பங்களில் பற்று[illegible] இதை காணவா என்னை இவ்விடம் வரச்செய்தது? கஷ்டம்! என்று சங்கரர் தேறுதல் சொல்வதை

கேட்டு, ஸுப்ரமணியின் அம்சமான பட்டபாதர் சொல்கிறார்

ஓ கைலாஸநாதா, ஸ்ரீசங்கர பகவானே, நான் உம்மைக் கண்டபோதே, அக்னிஜ்வாலையில் காமல் குளிர்ந்த புஷ்பம் போலிருக்கிறது! நான் தன்யனானேன்! என்று அக்னியில் படுத்துக்கொண்டு ஓ பரமபொருளே, உம்முடைய திருக்கரங்களால் என்னைத் தொட்டு பரிசுத்தம் செய்வீராக! எப்போதும் உமக்குத் தொண்டு புரியவும், எப்போதும் சுப்ரமணிபோல இருக்கவும் அருள்க! அருள்க! நான் தன்யனானேன்! தன்யனானேன்! என்று சொலவி ஸ்ரீசங்கரருக்கு மஹேமயமாய நமஸ்கரித்து இன்னும் சொல்கிறார் ஓ சங்கர பாதரே, என் உத்தம சிஷ்யரான மண்டன மிச்சரரையும் ஸரஸவாணியையும் வாதம் செய்து ஜயம் பெறுவீராக! என்று தும் ஸ்ரீசங்கரர், ஸுப்ரமணியின் அவதாரமான பட்டபாதருக்கு அருள, தன் திருக்கரங்களால் அவர் சிரஸில் தொட்டவுடன்; ஓர் திவ்ய ஜோதி தோன்றி ஐக்கியமானார் தேவர்கள்

பூமாரி பொழிந்தார்கள். யாவரும் ஸ்ரீசங்கரரு டைய ஆசசாயங்களை பாடிக்கொண்டே இவர் பகவானே! இவர் பகவானே! என்று பலவித மாக துதித்து ஆசிபெறமுார்கள் திவ்ய ஜோதி யில் கலந்த ஸ்ரீபடபாதரும் எங்கும நிறைந்த ஸ்பரமணியாக பிரகாசித்தார்!

ஓம் நம பார்வதி பதயே
ஹரஹர மஹாதேவா

சாந்தமே உருவம் கொண்ட சங்கர பக வான், ப்ரமமாவின அவதாரமாகிய ஸ்ரீமண் டன மிச்ரரிடமபோக யத்தனித்துகொண்டு வந்து, மணடனருடைய மனை யடைந்து பார்க் கையில், கதவுகள தாளிட்டபடியால், ஆகாயத் தின் மூலமாக வீட்டின் தாவாரததை அடைந் தார்.

இதைக்கண்ட காமமே மேலாகக்கொண்ட மண்டன மிச்ரா, ஸ்ரீசங்கரரை பார்த்து சொல்கிறார்.

(அடாணு—எட்டாத கொம்பில் — மெட்டு)

1. இவலேவே தன்னிலே யாருமறியாமல்
செவலையாய நுழைந்தவன் யார் (இ

2. திதியாய வேலே செய்யுமெனக்கு
சதியாய் வந்த ஸங் - யாஸியோ (இ

3. ஏனிந்த திருடடுத்தனமுனக்கே
எங்கிருந்து வந்ததோ (ஏ

4. என் காமாதிகள முடிந்துதானுன்னே
பன்மட னருபசரிப்பேனய்யா (ஏ

தேவஸ்தானத்திற்கு ஸ்ரீவியாஸரும், பிதிர் ஸ்தானத்திற்கு ஜைமினியும் ஆவாஹன பூர்வம நடத்தும் திதிககு யாரும் வாராதபடி கதவு தாளிட்டிருக்க, திருடனைப் போல இவவிடம் வந்தது பிசகு! என்று நினைத்த மண்டனருக்கு வியாஸரும் ஜைமினியும் சொல்கிறார்கள்! ஓ சிஷ்யனாகிய மண்டனு! உனக்கு திருடனைப் போல தோனறினுலும் அதுவும் தகுமா? எனன வெனறால், கர்மாதிகளை கடந்த மஹான்களுக்கு இதை அறிய வேண்டியதவசியமில்லை! ஆகையால் அவரை அழைத்து உபசரித்து,

ஜனார்த்தனராக ஆவாஹித்து நாராயணராக வரவேண்டுமென்று வணக்கத்துடன் அழைத்தனர்! என்றார்கள். இதைக்கேட்டதும் உடனே ஸ்ரீ சங்கரருடைய காலில் வீழ்ந்து ஜனார்த்தன ஸ்தானத்திற்கு அழைக்கவும் ஸ்ரீசங்கரர் சொல்கிறார்.

(எட்டுக்குகோமபில — மெட்டு)

5. சோற்று பிச்சைக்காக நானுன் வீட்டுக்கு
நாட்டமாய் வந்தேனல்ல (சோ

உடனே மண்டனர் மன்னிப்பு கேட்டுக் கொண்டு எதற்கு வந்தீர் என்பதை தெரிவித்தால், பிக்ஷையானதும் செய்கிறேன் என்றார்.

6. மற்றவாதங்களின் சுற்றங்களைப்போலும்
பற்றுமேசல பிச்சைக்கே—வந்தேன (ம

மண்டனர் இதைக்கேட்டு மறுபடியும் பாதக் கமலங்களில் வீழ்ந்து நாராயண ஸ்தானத்திற்கு வரவேண்டுமென்று, கை கால்களைச் சுத்தம்செய்து, தேவராக எழுந்தருளச்செய்து, திதியை ஸம்பூர்ணமாக முடித்துக்கொண்டு,

தானும் சேஷங்களை பூஜித்து, வாதபிச்சை நாளையிலிருந்து செய்வோமாக, என்று சொல்லி, ஆச்சரியமென்று பதிலளித்து அவளி டமே சிஷ்ய கோஷ்டிகளுடன் தங்க ஏற்பாடு செய்தார்கள்.

முன் சொல்லியபடியே மறுநாள் ஸ்நான பானாதிகளை முடித்துக்கொண்டு வாதத்திற்காக வாத பண்டிதையின் உட்கார்ந்தார்கள். உடனே வியாஸரையும் ஜைமினியும், எங்கள் வாதத் திற்கு தலைவர்களாக இருக்கவேண்டுமென் றார்கள். இதைக்கேட்ட ஜைமினியும், வியாஸ ரும், உன்னுடைய கிழத்தியான உபய பார தியை தலைவராகச்செய்! அந்தக்கிழத்தியாவும் அறிவாள்! என்றுரைத்து மறைந்தார்கள்! அந்த வாணியின் அவதாரமாகிய உபய பாரதி யாரை (அதாவது மண்டனரின் ஸஹதாசரிணி யான வாணியை) இருவர்க்கும் தலைவளாகச் செய்து, வாதத்திற்கு சித்தனித்தார்கள்.

ஸ்ரீசங்கரர் சொல்கிறார்! என் சித்தமதில் ஸர்வலோகமும் பரந்து நிற்கும் ஸச்சிதாநந்த

சுடர் மாணிக்கம்போல திகழ்கிறதில் ஸதா யோகம புரிந்து பரமஹம்ஸராக இருப்பது வாஸ்தவமானால், நான ஜயம்பெறுவேன். இல்லையேல் கர்மி யெனறே சொல்லலாம்! எனறு சபதம் செய்தார்.

ஸ்ரீமண்டனரும், ஜைமினி முனிவர் உரைதத வாக்கியத்தில் முழு நம்பிக்கையுடனிருநது காமங்களைச் செய்து வருவது வாஸதவமானால், கர்மமே ஜயம் பெறும்! இல்லையேல் நான் உன் அடிமை தாஸனாகுமென்றார்.

இந்த இரண்டு சிஙகங்களும் சபதம் செய்துக்கொண்டு, வாதிறகு இருக்கக் கண்ட வித்வானகளும், ரிஷிகளும, அறிஞர்களும் அயலூரிலிருந்து வந்து, மண்டனருடைய மனையடைந்து யாவரும் உபசரிக்கப்பெறறு, பிரஸங்க கூடடத்தை அடைந்து, ஆங்காங்கே அவரவருக்கேற்ற தகுந்தபடியுளள ஆஸனத்திலமர்ந்தார்கள

ஸபையில ஸ்ரீசஙகரரும், ப்ரஹ்மாவின் அம்சமான ஸ்ரீமண்டன மிச்ரரும் உட்கார்ந்தார்

ஓ சங்கரரே, கர்மமில்லாவிட்டால் தர்மங்களை செய்ய முடியாது அதுபற்றி ஜைமினியின் வாக்யத்திலேயே உறுதிகொண்டு கர்மாதிகளை நடத்தி வருகிறோமென்றனர். இப்படி சொல்வதைக்கேட்ட ஸ்ரீசங்கரர் சொல்கிறார்

எட்டாத - மெட்டு

11. ஜைமினி முனிவர் சித்தத்திலிருக்கும்
கருத்தல்லவே ஓ பண்டிதா (ஜை

12. முற்றிலுமதையுள்ள கந்தத்தாயுணர்ந்தால்
சற்று மிகுதிபேச மாட்டாய் (ஜை

ஓ பண்டிதரே ஜைமினி சொல்லியிருக்கும் சாஸ்திரத்தை உணர்ந்தால இவ்விதம் பேசமாட்டீர் என்றார். இதைக்கேட்ட மண்டனரும் கேழ்க்கலானார்

(எட்டாத - மெட்டு)

13 பெரியோரெழுதும பலநூற்களெல்லாம்
சரியல்லவோ சங்கரா (பெரி

14 மரியாதையில்லா மனிப்படிபேச
குறிக்கும்தன் வாக்யமோ (பெரி

இந்த ஏளனமாக பேசும் வாக்கைககேட்டு ஸ்ரீசங்கரர் சொலலுகிருர்.

(எட்டாத - மெட்டு)

15. இவவித புத்தியை எஙகிருந்து கொண்டாய்
செவ்வையா யென்னிடம் பேச (இ

16. இவவிதம் தானாகத நூற்களைப்படித்து
பூவுறுஞசிவிட்ட தேனீயோ நீ (இ

ஓ பணடிதரே, தேனீயானது எங்கெங கிருநது பலபூவிலுளளதேனை எடுத்து சேகரித்து தான அனுபவிக்காததைப்போல, பல நூறகளைப படித்து அதன தேனை உண்ணுமல விடுகிருய்! ஆகையால் எநத நூறகளைப் படித்தாலும் அதனுள்கருததை அறியாதவன் அத்வைத மானமுக்தியை அடையமுடியாது எபபோதும் உன் கருத்தை ஆராய்நது சாந்திக்கொள்ள வேண்டுமென்ருர்

இந்த திவ்ய வசனததைக்கேட்ட ஸபையோர் யாவரும் வியப்புற்று பூமாரி பொழிந்தார்கள். இந்தப்படி ஸ்ரீசங்கரர் வாக்யத்தைக் கேட்ட மண்டன பண்டிதர் கேழக்கலாஞா

(எடடாத - மெட்டு)

17 எநத நூற்களிலுள்ள கரந்தத்தை
எப்படி படித்து உரைத்தாய் (எ

18 அதை எனக்கறிந்திடும் வண்ணம
பதையாமலுரை சஙகரா (எ

இதறகு ஸ்ரீசஙகரர் பதில் கூறுகிறார்

(எடடாத - மெடடு)

19. ஏட்டுசசுரககாயை நாட்டமாய படித்து
எளிமைபறறிய வனலலா (ஏ

20 சிலமாயனுபவமே யெனக்கு வர
பால ஸநயாஸி யானேன் (சி

21 இதை யெடுததுரைக்குமென் குருநாதா
கோவிந்தரின் வாக்யமாகும் (இ

22. இனனும் பல சூததிரங்களையும்பாடி
என்னும் முழஙகு கிறதே (இ

ஸ்ரீசஙகரா சொல்வதைக்கேட்டு யாவரும் கைசசததம்பொட்டு, ஸ்ரீசங்கரருக்கு ஜெய்! என்று பாடி பூமாலைகளை எறிநதார்கள். உடனே உபயபாரதி யம்மையாா இருவருக்

கும் இரண்டு மாலையை சூட்டி, எவா உடலி
லிருக்கும் மாலை வாடாமலிருக்கிறதோ அவர்
ஜயமடைவாராக! என்று உரைத்து ஸ்ரீசங்கர
ருக்கும் ஸ்ரீமண்டன பண்டிதருக்கும் மாலையை
சூட்டினார். பண்டிதர், ஸ்ரீசங்கரரிடம் கேழ்க்
கிறார்.

(எட்டாத - மெட்டு)

23 அநேக யுக்திகளா லென்னிடம
அருமை மொழி புகன்றாய (அ

24. ஆனாலுமதில காமாவில்லாமல்
தானெப்படி அடையலாம் (ஆ

இவ்விதம் பண்டிதா கேட்டதற்கு ஸ்ரீசங்க
ரா பதிலளிக்கிறார

(எட்டாத - மெட்டு)

25. கர்மத்தின் முடிவை யறிந்துக்கொள்ள
தாமவிசாரம் செயயேன் (க

26 இன்னும் பல நூற்களை யறிந்து நானு
ரென்றும் சிந்தனை வேண்டும் (இ

27 இப்படி பழகின இருதயமதிலே
அப்படியே முகம் காணும் (இ

28 கர்மாவை கடந்த கருணைபொருளை
ஈறுபதமாயறிய வேண்டும் (க

இவ்வுலகத்திலுள்ள பற்றுதலான கர்மாவை விடுவதற்கு தகுந்த உபாயத்தை அறியும்போது, பற்றுதலில்லாமல காமயோகம் புரிந்து, அதன் முடிவை அடையும்போது ஜ்ஞான முணடாகும் ஆகையால அஞ்ஞானிகள் கர்மம் புரியவேண்டும்! பிறகுதான். அதனுள கருததான ஜ்ஞானம் விளஙகும. ஜ்ஞானமெது? எனபதை அறிவதற்காக கர்மாதிகளை புரிநதால் காமஙகளை கடககச்செய்யும் ஓ பணடிதரே! நீர் ஓா நமபிக்கையினுல் கர்மம் பெரிதென்று சொல்கிறீா. சீக்கிரத்தில் அதன் முடிவான ஸநயாஸத்தை என்னிடம பெறப் போகிறீர் என்று ஸ்ரீ சங்கரா சொல்லவும, யாவரும் பூமாரி பொழிநதார்கள்.

இதைக்கேட்ட மண்டன பண்டிதருக்கு நாவெழாதிருந்தும் சொல்கிறுர்.

ஓ சங்கரா ! ஜைமினி, கௌதமர் சொல்லிய சாஸ்திரத்தில் பெரும் நம்பிக்கை வைத்துககொண்டு யாவுமஎமபிரானுக்கே அர்பனமாக கர்மாதிகளை செயது வந்ததின் பலனைக் கொண்டு உமமிடம் வாதம் புரிந்தேன் எனறார்.

இதைககேட்ட ஸ்ரீ சங்கரா, பண்டிதருடைய பெரும் நம்பிக்கையை சிறநததெனகூறுகிறா.

ஓ பண்டிதரே, முன்னோர்கள் செய்த சாஸதிரததில பெரும நமபிககையை வைத்து கர்மாதிகளை செய்து வநததினாலேயே, என்னை இங்கு அழைத்து யாவாகளும் காண பிரஸங்க கோலமாககிறது போலும் ! என்றா.

இவவிதமாக ஸ்ரீசஙகரருக்கும் ஸ்ரீமண்டனமிச்ரருக்கும் வாதம் நடந்ததை பார்ப்பவர்களும் கேட்பவாகளும் வியப்புறறாகள் இனனும் பல வாதங்களை புரிந்துக்கொணடிருக்கும் வேளையில் பண்டிதரின் கழுத்திலுள்ள மாலை வாடிறறு உடனே பண்டிதர் ஸபையை

விட்டெழுந்து, தோலவி யடைந்ததாக வெண்ணி முகவாட்டமுடன மறைவான இடத்திலிருநதுக்கொண்டு தியானததிலமாந்து சிந திக்கலானார். "நான இவ்வளவு படித்தும் கர் மததை நம்பி தொழில் செய்ததின் பலனி துவா? கஷ்டம்! இவவித அவமானம் எனக்கு ஒருபொழுதும் வந்ததே யிலலை! சைமினி, கௌதமா இவர்களின் கருத்து பொய்யா? அவர்கள சொல்லி யிருப்பவைதான் நடத்தி வந்தேன். அதன் பலன் இன்று கிடைத்தது போலும்! என்று பலவிதமாக புலம்பிக் கொண்டிருக்கும்போது, ஸ்ரீஜைமினி முனிவர் தோன்றி ஸ்ரீமண்டனருக்கு ஆசி கூறுகிறார். ஓ மணடனா! நீ எல்லாம் படித்து முழு நம்பிக் கையுடன இருநதமையாலதான அநத எங்கும் நிறைநத அறிவுடைய ஸ்ரீசஙகர பகவானிடம் வாதம்புரிய பாகயம் செயதாய! பின்னும் அவரை அடைந்ததற்கு என்றைக்கும் திருமபாத பதவியைக் கொடுப்பார். ஆகையால் என் னுள கருத்தும் அவர் சொலலும் அதவைதமே யாகும்! இன்னும் அந்த எஙகும் அறிவுடைய

சூரியனாக தோன்றும் ஸ்ரீசங்கர பகவானிடம் ஸந்யாஸமபெற்று நித்திய பதவியாகிய அத்வைததவைத அடைய நீ பூர்வம செயத புண்யமேயாகும என்று திருவாய மலாநது அருளி மறைந்தார்.

உடனே பணடிதர் ஸபைக்கு ஓடிவநது ஸ்ரீசங்கரரின பாதகமலஙகளில் வீழநது துதிக்கலாயினர்.

எஙகும நிறைந்த பொருளாகிய சங்கரா, எனனுடைய காமங்களை கழித்து பரிசுததம் செய்த தயாநிதே, இந்த பூமை யரை கூடி ஆடிடாமலுள்ள வைராக்யததைத தநத குருவே; அஜஞானததை நீக்கி ஞான சூரியனை அந்தர் முகத்தில் தோன்றச்செய்த ஆநந்தபவே, மௌனமாக இநத அவயவஙகளை இருக்கச் செய்து நிசசலமாக சேர்தது மங்கள ஸ்வரூபா சரணம் சரணம் என்று துதித்துக் கொண்டு சிஷ்யர்களுடன் தானுமொரு சிஷ்யனாக நின்று ஸ்ரீசஙகரபாதரை ஸேவிததுக் கொணடு ஸந்யாஸிக்க கேழககிறார்.

(பந்துராவளி—ஆதிதாளம்)

ப; ஸ்ரீகோவிந்த பாதனருள சிஷ்யனே
சங்கரா —ஸ்ரீ

அ-ப, மாவிந்து மலாகள் மலர்ந்திடும்
குஹையில்
தூவி யடையுமடியார் தொண்டு
புரியதில் —ஸ்ரீ

ச. மாடு மக்களிவை யெல்லாம கூடும
சந்தைபோல்
ஆடி களிக்குமிதை யனபாயறிந்திட்ட
படாந்த நூற்களை படாந்துள்ளறிந
தோய்
இடர்களை தொலைத்த ஈர சுப்ரமணி
சொந்த —ஸ்ரீ

இதைக்கேட்ட ஸ்ரீசங்கரர் மணடனருக்கு ஸந்யாஸத்தின் பெருமையைச்சொல்லி தண்டு கமண்டலம காவியுடை கொடுத்து சிஷ்யராக்கிக்கொண்டார். உடனே தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

இந்தவிதமாக ஸ்ரீசங்கரபாதருக்கும், ஸ்ரீ மண்டனருக்கும் ஏழுநாள் நடந்த ஸம்பாஷணையை ஸ்ரீபத்மபாதர் இருபதினாயிரம் ஓலை சுருட்டில் எழுதினார் என்றார். அதை வர்ணிக்க யாரால் முடியும்? ஏதோ எனக்கு தெரிந்தமட்டிம் சுருக்கமாச்சொல்லி முடித்தேன், இதை படிப்பவரும் கேழ்பவரும் நற்கதியடைவார்களென்பதில் சந்தேகமில்லை!

சாந்தி

ஓம் நம பார்வதீபதயே
ஹர ஹர மஹாதேவா

பன்னிரண்டாம் அத்யாயம் முற்றிற்று

ஸ்ரீசுப்ரமண்ய ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீசங்கர கீதை

---

## பதின்மூன்றாம் அத்யாயம்

ஸ்ரீ உபய பாரதியின் வாதமும், அரசலீலையும்,
ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்ஹரின் அருள் பெறுதலும்,
வாணியை ஜயித்து வாணிக்கு ஸங்யாஸம்
கொடுத்தலும்

தன் நாயகன் ஸந்யாஸம் பெற்றதைக் கண்ட உபயபாரதியம்மையார், ஸ்ரீசங்கரரை ஜயிக்க எண்ணம் கொண்டு வாதத்திற்கு அழைத்தாள். ஓ சங்கரரே, என்னிடமும் வாதம் புரியவேண்டுமென்றாள். அதற்கு சங்கரர், எனக்கு பெண்மணிகளிடம் வாதம்

செய்ய ஸம்மதம் இல்லை! என்றூர். இதைக் கேட்ட வாணியும் ஈச்வரனுகிய பரம்பொரு ளுககு ஆண பெண என்ற வேறறுமையுணடோ? யாராகிலும் உண்மை அறிநதவாகளானல் அவாகளிடம் பிரஸங்கம் செய்யககூடாதோ? எனறுள இதைக கேடடதும், சரி! வாதம் புரிவோமாக எனறு சொல்லி வெகுநேரம இரு வர்களுககும வாதம் நடநதது. அப்படி யிருக்க வாணியானவள் சிந்திககலானுள், இவரோ பாலஸநயாஸி! காம சாஸதிரத்தில் இவருக்கு அனுபவமிராது ஆகையால், காம சாஸதி ரததை வினவுவோமாக! என்று சினைத்தவ ளாய ஸ்ரீசஙகரரிடம் கேழககலானுள

ஓ ஸ்ரீசஙகரரே, காமகலைகள் எவவளவு? அதன பிரிவுகள் எவவளவு? எநதவிதமாக புருஷரிடததிலும பெண்களிடததிலும் இருநது வருகிறது. சொல்லுமெனறுள்.

அதற்கு ஸ்ரீசங்கரா மொழியலானுர்; ஓ வாணியே, பரம்பொருளுக்கு வேறறுமை யில்லையாயினும் உன்னுடைய பெண் ஸ்வரூபத்

திறுல வேற றுமையுடைய வாக்யத்தை மொழி கிருய? இதற்காகவே உன்னிடம் வாதம் செயய மனமில்லாதிருந்தேன் இபபோது நீ இவ்விதம கேட்டதறகும் காரணமுண்டு. ஆகையால், இபபோது உன்னிடம இதற்கு பதில் கூறிறுல் நன்ருய் இருக்காது. இநத காமகலைகளைச் சொலலி காட்டுவதைவிட செய்துகாட்டுவதுதான் உசிதமாகும். ஓ தாயே; நீ உரைதத காம சாஸதிரததை, நான் ப்ரம்ம ஸவரூபமாக இருந்துககொண்டே, என் அனு பவ நாடகததைப பார்த்து தெரிநதுகொள். இதோ போகிறேன் ஒரு மாதத்தில் வருகி றேன என்று மொழிநது ஸபையோர்களிட மும் வாணியினிடமும் விடைபபெற்றுச சென்ருா

இக்த வைபவததைககண்ட ஸபையோர் கள் வியப்புறறு நின்ருர்கள் காமததில் விருப் பமுள்ளவாகள இவள கேட்டது சரியெனறும, காமத்தில் இசசை யில்லாமல பகவானை நாடும் தர்ம குணமுள்ள அறிஞர்கள், இந்த

விதம் பெண்களை கேழ்க்கலாமா? என்ற உத்தம வாக்யத்தை உரைத்துக்கொண்டு கூட்டம கலைந்தது.

அப்படி யிருக்க அவவிடமவிட்டுச் சென்ற ஸ்ரீசஙகரரும் சிஷ்யர்களும ஓர் மலை சார்பில் உடகார்ந்தாரகள, ஸ்ரீசங்கரர் சிஷ்யர்களை நோககி பல வாகயங்களை பேசிககொண்டிருக்கும்போது, அவ்விடததில ஓர பிணததை போட்டுக்கொண்டு வளையமாக பெணகளின அழு குரலையும கேடடார்கள். இநத கோலததைக்கணட ஸ்ரீசஙகரர் சொல்கிறார ஓ என அருமை சிஷ்யர்களே; நான இப்போது இநத பிண உடலில பிரவேசித்து காமசாஸதிரத்தை அறிந்து வருவேனாக! எனறு சொல்வதைக் கேட்டதும், பத்மபாதர் குருவின் பாதத்தை பிடித்துக்கொண்டு சொல்கிறார்.

(ஏனையா நித்ரை கொண்டீர் — மெடடு)

ப. ஏனித்த பெண்ணாம் கொணடீரா என்
குருநாதா —ஏ

அ-ப: நானிந்த வித்தையை முன்னுவிருந்த

முனிவர்களும் பாரதது பதைத்தா
ரல்லவோ —ஏ

ச; இதனாலெனக்கு மனம வரவில்லை
முநலெனவுமக்கு 'முன சொன்னதிலலை
உம்மிடத்தாலென் அன்பாயிபபடி
உமமிட முறைத்தேன் குருநாதா —ஏ

இதறகுமுன் பல முனிகள் கூடுவிடடு இனனொரு கூடை அடைநது, மதிமயங்கி போனார்கள் அல்லவா? அதை தங்களாலேயே கேட்டேன் அன்றோ? இப்படி நான சொலவதும உம்மிட மிருககும் ப்ரேமையினல் சொல்கிறேன் என்றார் இதைககேட்ட ஸ்ரீசங்கரர், ஓ என் ப்ரிய பதமபாதனே; கேள் நான் சுதத புதத பற்றற்ற ஆகாயததின் சைதன்ய ஸவரூபமேயான அகண்ட அத்வைத ஸவரூபமாயிருக்க, இநத துவைதம் என்னை என்ன செய்ய முடியும்? தாமரையிலையில் தண்ணீர் நிற்குமா? பின்னும் கோகுலத்தில் உதித்த ஸ்ரீகிருஷ்ணன் பதினாறுயிரதஙெட்டு கோபியரையும் கூடியும் "தான் ப்ரம்மசாரி" என்று வெளிப்படுத்த

வில்லையா? ஆகையால் உனக்கு ஸந்தேகம் வேண்டாம்! 'நான அத்வைத ஸ்வரூபம! நான ப்ரம்மமாகும்!'' அதனாலே என்னை தொழில் செய்விக்கவோ செய்யவோ முடியாது ஆகையால் இந்த உடலை பாதுகாத்துக் கொள்ளுங்கள். சென்று வருகிறேன் என்று சொலலி நிஷ்டையிலமாந்து, அரசன் பிணத்தில் புகுந்ததும், கால், கை, தலை அசைந்து தூங்கினவனைப்போல எழுந்தது உடனே அடுத்து இருக்கும பெண்மணிகளின் அழுகுரல் போய் இனிய குரலாயிற்று அரசனை மந்திரிகள் சூழ அரணமனைக்கு அழைத்து வந்தார்கள். யாவரும ஆசசரியப்படும்படியான முக விலாஸமும், நடையும் அரசனைவிட பல்லாயிர மடங்கு தர்ம ஸவரூபமாயிருந்தார். பின் மந்திரிகள சூழ ஸிமமாசனத்திலமர்ந்தார். உடனே பெண்மணிகளும் பெரியோர்களும் வந்து புஷ்பவாஷம் சொரிந்தார்கள். பெண்மணிகள் யாவரும் இந்த மாயா அரசனை பார்த்து மோகம் கொள்ளாமல் போவதில்லை. இந்த விதம் யாவரையும் மோகிக்கும்படியான அரச

னுருவம் கொண்ட யதிராஜரை ஸேவிக்கும பொருட்டு பல நாட்டியமும் பாடலுமாக நிறைந்திருந்தது பல பெண்கள மாயா அர சனை மோகம் கொண்டு உரைக்கும் வாக் யத்தைக்கேட்ட ராஜராஜா சொல்லுகிறார். ஓ ஸகோதரிகளான பெண்மணிகளே, நீங்க ளேன் என்னை மோஹிக்கிறீர்கள் வேண்டாம்! எனனிடம் உங்களுக்கு எவ்வளவு பிரியம் இருக்கிறதோ, அந்த காதல் முழுதும் ஸ்ரீசங் கர பகவானுக்கு பக்தியாகச் செலுத்தினல் மோக்ஷமுண்டு! என்னை மோகிக்காதீகள இந்த உடல் பிணமாக போவதை அறிந்தால மோகிப்பீர்களா? ஆகையால பரமனை பஜியுங்கள்! என்று உரைதது யாவருக்கும் காதல் பக்தியை ஊட்டி, மோக்ஷ வீட்டின் கதவை காண்பித்தருளினார்.

இவ்விதம் ஆடலிலும் பாடலிலும் மனம செலுததாத மாயா அரசன் இருப்பத்தைந்து நாள் அரணமனையில கழித்து ராஜ தர்மத்தை அதி விமரிசையாகச் செயதார். இதைக்கண்டு

யாவரும் அதிசயித்தார்கள். அப்படி யிருகக அம்மகாராஜன் பத்னியானவள் சிநதிக்கலானுள் "நம் அரசன் இறநது எழுநது வந்த நாள் முதற் கொண்டு என்னிடம் வரவேயில்லையே! என்ன காரணம்?" என று பலவாருக நினைத்துககொண்டு, அனறு ராததிரியில் யோக நித்ரையிலமர்ந்து இருககும் யதிராஜரை பலாத்காரமாக அணைத்துககொண்டாள அபபோது அவளுக்கு மண பதுமையை வாரியணைபபதுபோ லிருநதது உடனே; இவர் நம அரசனல்ல! என்று நிச்சயிததாள்

இவவிடம் அறியவேண்டிய விஷய மொன்றுண்டு! என்னவென்ருல், சில மூடர்கள் (காமத்தில் இச்சை யுடையவர்கள) "சங்கரர் கூட பெண் லீலைககாக தன்னை விட்டு சென்ருர் நீயேன் பெணகளை மணந்து கொள்ளக கூடாது? கிரஹஸதனுகாவிட்டால ஸந்யாஸிக்கு அர்ஹனல்ல!" என்று பலவிதமாக பிதற்றுகிருர்கள். ஆனுல், அறிவுடையவர்கள் அப்படி நினைப்பதில்லை! "பகவான் ஸ்ரீசங்கரா

லீலைககாக போனாலும் மண்பதுமை போலவே இருநதார்.'' பார்ததீர்களா? ப்ரம்மசரியத்தின பெருமை! ஆகையால் மங்கையர் வலைக்கு அகப்படாமல் அவர்களை தேவிமார்களாகப் போற்றி, தான் ப்ரமமசசாரியாகவே யிருநது ஸநயாஸததை கைப்பற்றவேணடும்! இநதப் படிககு கிரஹஸதனானாலும தன னுடைல பிண மாக கண்டானகில அவனும் ப்ரம்மசர்யத்தை அனுஷ்டிததவனாவான் என்பதில சந்தேக மில்லை!

அப்படியிருகக அமமகாராஜன் மனைவியா னவள், சூரியோதயமானதும், ரஹஸ்யமாக ஓர் அந்தண மநதிரியை அழைத்து சொல்லுகி றுள் ஓ மநதிரியே! இவர் நம அரசனல்ல! இதைக்கேடடதும் மந்திரி; நானும் அபபடித் தான நினைககிறேன். இவருடைய முகவிலாஸ மும், ராஜதர்மமும் ஒழுக்கத்தையும் பார்க்கும் போது இவர் ஓர் யோகியென்றே சொலல லாம்! என்றுன். இதறகு ராணியும், அதற்கு சந்தேகமேயில்லை! நான நேற்று அவரை வாரி பணைத்தபோது பதுமையைக் கட்டுவதுபோ

விருநதது! என்ருள். இநத ஆச்சரியந்தைக் கேட்ட அந்தண மந்திரியும் யோசித்து இவர் யோகியே யாகுமென்று நிசசயம் கொணடு, ரஹஸ்யமாகவே அவருடைய உடல் வேறு இருக்கும்! அதை கண்டு பிடிக்கும்படி உத்தர விட்டான் அபபடி அநத உடலோ இநத உடலோ வென்று சந்தேகம் வேண்டாம்! எநத பிண உடலை கணடாலும் எரித்து விடுஙகள் என்று கட்டளை இட்டான்.

நாலாபக்கமும் தேடி பார்க்கையில் நானகு சிஷ்யர்களுடைய ஓசையைகேட்டு, குகையில நுழைநத சேவகாகள் பார்த்து பலாதகார மாக குருநாதரின உடலை எடுத்து சென்று நெருபபு மூட்டினுர்கள்.

' இதைககண்ட பத்மபாதா மனம பதைத்த வராய் அரண்மனை வாயிலில் வந்து பாடலாயி னர்.

(புனுகுவராளி—ஆதி)

ப, நீயே ப்ரம்ம மாகிருய என்னிடம் சொன்ன —நீ

அ ப, வாயேனெழுந்து வந்துடலைசேர
சேயாயெனக்கருள் சங்கர சேவை —நீ

ஸ்ரீபத்மபாதர் மனமுருகி சங்கரரை தியானித்து பாடுவதைக்கேட்ட அரசன, உடனே உடலைவிட்டு தானிருந்த இடத்திற்கு வரவும், அவ்வுடல் அவ்விடம காணுமையால வருந்தமுழும் வேளையில், ஸ்ரீகாயத்ரி தேவியால வழி காட்டபபட்டு எரிந்துகொணடிருககும் உடலில் சேர்ந்து, கணகளை விழித்து, நெருபபில நின்று காப்பாறறுமபடிக்கு தன் இஷ்ட தெய்வமாகிய ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ம மூரததியைத் தியானித்து பாடுகிருர்

(தோடி — ஆதிதாளம)

ப, கைகொடுத்தருளாய் கமலாபதி
நரஸிம்ம மூரததியாக வாது —கை

அ-ப, அபாரஸம்சார மாயையிலழுந்தி
பூபாரமென தவிக்குமெனக்கு —கை

ச, ப்ரஹலாதருக்கருள் பரம்பொருளே நீ
வரஹலாதமாயவர நாரதரு மாக

ஜீவனுல் தவிக்கும் பவநீயை நீக்கி
சிவவொளி தோன்றி சேவடி சோகநிட
—கை

இவவிதம் ஸ்ரீலக்ஷ்மீ நரஸிமம மூாததியை துதிக்கவே, ஸ்ரீ நரஸிம்ஹா் தோன்றி ெநருப் பை விடுத்து தன தோழரான ஸ்ரீசங்கரரை தன் திருகரஙகளால் எடுத்துவிடடு மறைந தார். இதைககணட தேவாகள் பூமாரி பொழிந தார்கள. சிஷ்ய கோடிகளும் பாடிகொணடு வந்து குருநாதரை சேவித்து நின்றுர்கள்.அரசக கூட்டத்தாரும தொடர்நது வநது அஞ்சலி புரி வதைககணட ஸ்ரீசங்கரா, புன் முறுவல் செய்து, "பரம்மசாயததின் பெருமை இன்று தான் அறிநதேன பத்மபாதனே!" என று திரு வாய மலாநதருளி யாவருக்கும் அபயம் கொடுதது தன்னை ரக்ஷித்த ஸ்ரீலக்ஷ்மீநரஸிமம மூர்த்தியை துதிககிருர்

யாவரும் அறியாமல் என்னிடம் வநது காப்பாற்றின தயாநிதியே, பரம்பொருளே; நான எபபோது முன்னை எஙகும் பார்த்து அஞ் சலி புரிய அருளவேணடும! பிரபோ.

(எப்பவருவாரோ—மெட்டு)

ப. எடுத்தாண்டாயே நீயால் தவித்த
 யென்னை —எ

அ-ப; திவ்ய நரஸிம்ஹ மூர்த்தியாய தோன்றி
 தியை அணைத்தருளிய தயாபரனே —எ

ச. ப்ரஹலாதருக்கருள் பரஹலாதனே
 ப்ரமமாதி பதியே பவித்ரமாய் வந்த —எ
 சம்சார மாமுடல் சம்ஹாரம் செய்ய
 சம்சாரமதில் சாகரத்திலுழலா —எ

பரமாத்மாவாகிய ஸ்ரீநரஸிம்ஹ மூர்த்தியின் பெருமையைக்கூறி, அவவிடமிருக்கும் யாவருக்கும அபயம் கொடுத்து, வாதிற்காக வாணியிடம் வருவதைக கண்டதும், திடுக்கிட்டு உபய பாரதியார் பயந்தவளாகக் கொண்டு, ஸ்ரீசங்கரருடைய பாதகமலஙகளில் வீழ்ந்தாள் மன்னிப்புக்கேட்டு நீா பெருக்கிஞள். தகாத கேள்வியை கேட்ட அடியாளின நாவை அறுமென்ருள். இவ்விதம் பலவாராக தன்னை தூஷித்துக்கொண்டு, தான் செய்த அபராதத்தை பொறுத்தருள வேண்டுமென்று துதிக்கிருள்.

(கலயாணி—ஆதி)

ப, ஓ சிவசங்கரா நீயேதுணை
பவஹரசீலா பரமதயா — ஓ

அ-ப, தவகுண நியான யோகதயா பரனே
தவாதீத சுதத சைதன்யனே — ஓ

ச; ஆரியாம்பாளருள் அருமை புதரா
சாரதாம்பாள் சிதபீட நேத்ரா
ஓங்கார ரூபனே ஸ்ரீ ஜகத்குருநாதனே
ஹரீங்காரவேல்தர ஸ்ரீ சுபரமணிகீதா — ஓ

இநத விதமாக வாணியானவள் ஸ்ரீசங்கரரை துதித்து ஸந்யஸிகக கேட்டாள. ஸ்ரீசங்கரரும் கர்வம துலைந்த வாணிக்கு, அருள் கூர்ந்து விதிப்படி ஸந்யாஸத்தின் பெருமையைககூறி; தணடுகமண்டலம் காவியுடை கொடுத்து ஆசிர்வதிக்கும்போது, தேவாகள பூமாரி பொழிந் தார்கள். உடனே அசரீரி கேழக்கலானர். "ஓ சங்கரா! வாணியை நீ ஜயிததமையால், ஸ்ரீ சாரதா பீடம் சிருங்க கிரியில் சமைப்பாயாக! எனறைக்கும் உன் குரு பரம்பரையும விளங்கி வரட்டும்!" எனறு அருளினதைக்கேட்ட ஸ்ரீ

சங்கரரும் ஆனந்தம் கொண்டு தேவியைடி துதிக்கலாயினார்.

ஓ பராசக்தியே! இந்த உலகத்திலுள்ள பெண்மணிகளை உன்னுடைய அம்சமெனக் கருதி, சாந்தி கொண்டதினாலேயே வாணியை ஜயிக்க செய்தாய்! ஓ தயாபரி,

(பைரவி - ஆதி)

ப, வாணி சாரதா வந்தருள் புரிவாய் வர
வீணகரீவேணி விளங்கின முகமுடன்-வா

அ-ப, குணாதீத பரமே குங்கும சோபையே
பணிமணிதர ப்ரீயே அம்பிகே தாயே-வா

ச இதுவரை நடந்த வாதமெல்லாம
அதுவாய் நிற்கும் பொருள நீயே
போதும் பற்பல வாதுகளெல்லாமிந்த
காதுகுளிர வாக்யம்தந்த தாயே —வா

இந்தபடி ஸ்ரீசாரதாம்பாளை துதித்து சாரதா பீடத்திறகு வேண்டிய ஏற்பாடுகளை செய்தார்

பதினமூனரும் அத்யாயம முற்றிறறு

---

ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீசங்கர கீதை

## பதினாலாம் அத்யாயம்

ஸ்ரீசாரதா பீடம் சமைத்தல் - மகுடபதி வாஸம்-ஹஸ்தாமலகரை சிஷ்யராக்கினதும்.

ஸ்ரீசங்கரா, மக்களை நற்கதி அடைவிப்பதற்காக உபதேசித்தும், அந்தமில்லா பொருளை அடைய ஜீவதயவே மேன்மையென கொண்டாடி அத்வைத ஸ்வரூபமாய விளங்கிக் கொண்டு, ஸ்ரீசாரதாபீடம் யமைக்க புறப்படும்போது தேவர்கள் பூமாரி பொழிந்து துதிக்கிறார்கள்.

(ரகுகுலநிதிம் — மெட்டு)

ப, சிவயோக சிரேஷ்டம் ஸ்ரீசங்கரரூபம்
பவரோக ஹரம் சிவம் - வாணீமயம் (சி
அ-ப; சிவபகத ஹருத்விலாசம் - தத்வமணி
ஸ்வரூபம் (சி
ச, சித்கலாவாஸினம ஞேயம் - சிரசந்திர
சூடம் ஸத்கலா நீதமயம்
புதத ஹருத்விலாசம் - சிததா மனோ
ஹரம்
சுத்த ப்ரம்மயிக்யம - ஸ்ரீசுபரமணி
ரூபம் (சி

இவவிதம் துதிதது மறைநதாாகள

ஓம் நம பார்வதீபதயே
ஹர ஹர மஹாதேவ

சிவயோக சிரேஷ்டரான ஸ்ரீசங்கரர், வாணியை ஜயிதது ஸ்ரீதேவியை ஹிருதய கவசமாக தரித்துக்கொண்டு, அதி குதூகலத்துடன வரும் வேளையில், உகிர வைரவன் இருக்கும் ஊரை அடைந்தனர். அந்த ஊரிலோ யாராகிலும் வழிப்போக்கர்கள வந்தால் அவர்களை

தன் இஷ்ட தெய்வத்திறகு பலி கொடுப்புப
வழக்கமாயிருந்தது இதை முற்றிலுமுணர்ந்த
ஸ்ரீசங்கரா, நிஷ்டை புரிநது நெற்றியில் அக்னி
வரச்செய்து (மதனை சிவன எரித்தாபபோல)
அநத துஷட வைரவனை எரித்தார். இதை
அவவூரிலுள்ள ஜனங்கள் பார்த்து மிகவும்
கொணடாடி களிப்படைந்து, "இவர் பக
வானே, நமமைக்காககவநத கருணை உருவமே
யாகும!" என்று பலவாறுக துதிததார்கள்.
பால ஸந்யாஸியாக வேடம் பூண்டு வந்ததும்,
சாநத பைரவர் எனபதை நாம் அறியவேண்
டும்! அபபடியிருக்க அந்த வைரவனுக்கு
இந்த வைரவன வேணடுமென்று நினைப்பது
தகாத காரியமல்லவா? இந்த திவ்ய பால ஸந
யாஸியோ நமமை காப்பாறறி, துஷடனை எரித
தாா எனறு பலவிதமாக துதித்து ஸ்ரீசங்கர
ருடைய பாதகமலஙகளுக்கு பூஜித்து ஆசீர்
வாதம் பெற்றாகள். அவ்வூர் ஜனங்களுக்கு
அபயம்கொடுத்த கருணை வள்ளலாகிய ஸ்ரீசங
கரர், அவ்விடம்விட்டு துங்கையும் பத்ரையும்
கூடுமிடமான திவய இடததை அடைந்தார்

கள் அஙகோா ஆனநதம் கிளம்ப துஙகபதரா தேவியைப் பார்தது பாடுகிருர்.

(ஏநதனிடது—மெடடு)

1 அடியார் வசிகருமா நதி கைகலை யிதுவென
அடியிலலா உளள ததில கிளமபுதேயமம
அடியெடுதததோடும அகர வொலியுடன
முடியைத்தேட முழஙகும் துங்கபத்ரா —அ

2. எப்போது முனனையே பணியவேயருள்
அப்போதபபோதுக் கடியாாத்தெருள
தப்பாமலுள்ளமதில தானேயுணர்நதிங்கே
அப்பாவு மம்மாவும உன்னையே நமபி
னோன -அ

துங்கபதரா, உனனை கண்டபோதே முக தாகளுடைய கூடடங்கள் உள்ளததில தோனறி ஆனநத மடைகிறேன ஓ அருள் ப்ரவாஹமே, என்று யாவரும நமஸகரிததாா கள. வட கைலாசமோ இது? என ஆசசரியப் படுமபடியான திவய இடமே இது என்று சொல்லிக்கொண்டு நிறகும்போது, அவவிடத் தில் ஓா தேரை பிரசவிக்க, மழை பெயதமை

யால ஓர் ஸாபமானது வநது, அநத தலைககு நீர நனையாதிருக்கும்படி தன்னுடைய படத தைபபரப்பி குடையாக பிடித்துக்கொணடி ருப்பதை ஸ்ரீசஙகரர் பார்த்ததும், இவவிடம் தான ஸ்ரீசாரதாபீடம் சமைக்க வேணடுமென் றெனனி உளளம கொணடார உடனே அவ் விடம் ஸ்ரீ சாரதாமபாளை அஷ்டாங்கமுடன் ப்ரதிஷ்டை செயது, ஸ்ரீசகரமும சமைததார் பின மடாலயமும கட்டி, சைதனயா என்ற முககிய சிஷ்யருககு மடாதிபதியாக அபிஷே கம் செயது சொல்கிருர்.

இநத அபிஷேக குரு பரமபரை யானது ஜகத்குருவாக இருக்கட்டும் ! யார் யாருக்கு தகுந்தபடியுளள உபதேசஙகளையும செயதுக் கொண்டு, பகதியையும் காம யோகத்தையும் மக்களுககுக்காட்டி உதவிககொண்டிருக்கட் டும் ! நம்பினவரை காக்கவும், நம்பாதவரை சிறிது சிறிதாக் பழககி நம்பும்படி செய்து வரட்டும ! என்று சத்ய வசன முறைத்து ஆசி கூறினர்.

ஓம் நம பார்வதீபதயே
ஹரஹர மஹாதேவ
இம்மாதிரியாக மடாலயம ஸதாபிதது
தேசோடணம் புரிய ஸ்ரீ சாரதாம்பாளிடம்
விடை கேழ்கிருர்

(பைரவி - ஆதி)

ப; தாயே சாரதா யுந்தன் தனயனைகார் -
சற்றும் உன்னை விடடகலாத பகதியை
தநதாள —தா
அ-ப; தாயெனவேயிந்த சிருங்க கிரியில்வர
சொலுவிருநதுள குணகாட்டிடும் —தா
ச, எத்தனையோ துனபம் எளியன் செய்
தாலும
அததனையும் நல்குண-மாயெடுபபாயமம
சித்தனை போலுனை சேவித்து நின்றே
னிங்கு
முத்தனுகுமாறு சித்தியை காட்டு
மம்மா —தா

இபபடி ஸ்ரீசாரதாம்பாளை துதிக்கக் கேட்ட ஸ்ரீபத்மபாதரும! அஷ்டாங்கம்பண்ணி துதிக்கிருர்.

(ஷண்முகப்ரியா—ஆதி)

ப; துங்கபத்ரதாயே—பாலயமாம் —து

அ-ப, தங்கபதுமையுள தாஞய கண்டிட —து

ச, ச்ருங்ககிரிநிலேயே—சோபைநிய

ச்ருங்கார ஹரிங்பீட நிலேயே

சங்கரர் மாதா ஷண்முக ப்ரியே

மங்களநாயிகே மாணிக்கபூஷியே —து

இவவிதம் துதிதது ஸ்ரீ சாரதாம்பாளின் அருள் ஸேவையே தியானமாகக் கொண்டு, அவவிடம் விடடு, மஹாபலீசுவரர் வீறறிருக கும் கோகாணமடைநது, தரிசிதது பூஜிதது அருள பெற்று, அங்கிருநது அத்வைத மதற்கு எடுத்துகாட்டாயிருக்கும் ஹரிசங்கரக்ஷேத்திர மடைநது, தரிசித்து பூஜித்து, பராசக்தியான ஸ்ரீமூகாம்பிகையை நோக்கி பாடுகிருர்.

(நாதநாமக்ரியா—ஆதிதாளம்)

ப, ஸ்ரீமூகாம்பிகையே—பணிந்தேன்
நானே—ஸ்ரீ

அ-ப; மூவர்தேடும்வாணி—மூர்த்தினி நீயே-ஸ்ரீ

ச, முக்குண நிலையே நிற்குணபாதமே
பக்குவமானபக் தற்கருள்வாணி
மகத்தையடக்கிடும—மணிவீணாகரி
அகதததுளபாட அமலமாயருணதேவி —ஸ்ரீ

ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ மூகாம்பிகையை துதிதது ஆசிபெற்றுக கொண்டு அவவிடததிலிருநது சொல்லூரென்னும் ஊர்வழியாக வரும்போது, ஓா அநதணன் மகன் இறந்து கிடக்க, "யாரும் பாதுகாப்பு இல்லையா? எனறு புலம்பும் சத ததைதக் கேட்டதும், கருணையே உருவாக கொணட ஸ்ரீ சங்கரர் பார்த்து கமண்டலதது விருக்கும் ஜலத்தை, கய்யாலெடுதது, அக குழந்தைமேல் தெளிககவும் உறங்கினவனை போல எழுந்து நின்றான். இதைப் பாாததுக் கொணடிருநத ஜனஙகளெலலாம் அதிசய முற்று ஸ்ரீ சங்கர பகவானை துதிசெயது ஆசி பெற்றார்கள. அதன் பின் மகுடபதி என்னும் ஊரை அடைநது அவ்விடமிருககும் பஜனை மடத்தில தங்கலாயினர்.

அவவூரில் சுமார் இரணடாயிரம் பிரா மணர்களுடைய வீடுகள் இருந்தது. நல்ல

நீர்வளமும் நிலவளமும் இருந்து சுபிக்ஷமாக விளங்கிக்கொண் டிருந்தமையால், இவ்விடம் சிலது நாள் இருக்கலாமென்று நிச்சயம் கொண்டார்கள். அவ்வூரில் யாவரும் காம நிஷ்டர்களாகவே இருந்தார்கள் இவர்களில் தலைவராகிய பிரபாகர பட்டர் என்ற ஒருவர் இருந்தார். இவர் சாஸ்திரத்திலும் அநுபவத் திலும் மிகச்சிறந்தவர் இவர்தான் மகுடபதியி லேயே பெரிய ஆஸ்தியுடையவராகவும் இருந் தார். ஸ்ரீ பிரபாகரபட்டருக்கு எல்லா லக்ஷ்மி யும் நிறைந்து இருந்தது. ஆனால் அவருக்கு ஒரே மகன்தானுண்டு! அவனோ ஊமையாக இருந்தான். இவருக்கு இந்த துக்கமதானிருந் தது. ஏழு வயதாயினும் தம் மகன் பேசாமை யால் பூணூலையும் போட்டு வைத்தார் பின் னும் எவ்வளவோ மந்திர தந்திரங்களால் பார்த்தும், ஒன்பது வயதாகியும் பேசவில்லை! அப்படியிருக்க பிரபாகர பட்டர், "ஓர் பெரி யவர் நம் ஊருக்கு வந்திருக்கிறாரே, அவரிடம் தெரிவிக்காமல் அவருக்குத் தொண்டுபுரிய வேண்டும்!" என்று நிச்சயித்து, ஸ்ரீ சங்கர

ரிடம் வந்து தன் மகனின் குறையை தெரிவிக்காமல், குரு பணிவிடையையும், குரு பக்தியையும் செய்து வந்தார். "என்ன வென்றால், குருவுக்கு உள்ளத்தை சந்தோஷப் படுத்தினால் நம் மகனின் வியாதி தானே நீங்கு மென்பதை நன்கு உணர்ந்தவராதலாலும், கிர ஹஸ்தர்களுக்கு சந்யாஸியின் பணிவிடையே மேலானது! என்ற ஜைமினி சாஸ்திரத்தில் நி ரூபிப்பதை அறிந்து நடப்பவரும், தர்மா தர்மங் களை அறிந்தவராதலாலும் குருநாதருக்கு ஆறு மாத காலம் பணிவிடை புரிந்து வந்தார்."

அப்பணி விடையின் பயனாக ஆனந்தம் கிடைக்கவேண்டுமெல்லவா? இவ்விடம் அறிய வேண்டிய விஷயமொன்றுண்டு! "தனக்கு வேண்டிய ஆஸ்திகள் இருந்தும் பணியாளனைப் போல குரு சேவை புரிந்தார் பின்னும் குரு விடம், தன் ஊமை மகனை காப்பாற்றவேண்டு மென்று சொல்ல விரும்பவில்லை! குருவுக்கு மனமிரங்கினால் தானே வந்தடையும்! என்ற நிச்சயத்துடன் பணிவிடையின் பயனை கோராமல், நிஷ்காமிய குரு பக்தியை செய்துவந்தார்.

இக்காலத்தில் காணும் சிஷ்யர்கள் குருவின் வாக்கியத்தில் இஷ்டமில்லாமலும், குரு பணிவிடையில்லாமலும, "ஓா பிடி அன்னம் போட்டு விட்டால், துறவி நமக்கு அடிமை தானென்று நினைத்துக்கொண்டிருந்து தன் வியாதியை தீர்க்காதிருக்கிறார்கள் !" நாம் ஒரு குருவுக்கு பணிவிடை புரிந்தோமானால் அந்த நம்பிக்கை நம்மையே அடைந்து வியாதியை ஒழித்துவிடுகிறது. அதன உண்மைகளை முற்றிலுமுணர்ந்த பிரபாகர பட்டா ஆறுமாத காலம் பணிவிடை புரியவே அதன முடிவை காணவேண்டுமல்லவா ? அதுவும அவரை அறியாமல் அடைந்தது எப்படியென்றால், பிரபாகர பட்டரின் பத்தினியானவள் குழந்தையை கூட்டிக்கொண்டு, வாயலில் வரும் போது உள்ளே இருக்கும் ஸ்ரீ சஙகரா பார்த்ததும், உடனே தாயும குழந்தையும் அவ விடத்திலேயே நின்றுவிட்டார்கள் ஊமைக் குழந்தை ஸ்ரீ சங்கரரை கண்டதும் அஷ்டாங்க நமஸ்காரம் செய்து, ஒரு நாழிகை மட்டும் படுத்த வண்ணமாகவே யிருந்து, வேர்வை

நினைந்த உடலுடன் எழுந்தான மனம் களிப் படைந்து மௌனமாயிருக்கும குழந்தையை பார்த்து, ஸ்ரீ சங்கரர், நீ யார்? நீ எங்கிருநது வநதாய? நீ உடலா? ஏனிப்படி சடமின போலிருக்கிறாய? என்று கேழ்க, அநத குழநதை பேசலாயிறறு.

ஓ குருவே! நான ப்ரம்மமாகும! நான் சடனல்ல! நான் மூல பொருளின அம்சம்! இனி உம்மருளால நான பிறநத இடத்திற்கு அடையப் போகிறேன! என்று பதிலளித்ததைப பாாத்துககொணடிருநத தாயும பிரபாகர பட்டரும் ஆச்சர்யமடைநது, மயிர் கூச்சல் நிறைநதவண்ணமாகவும், கண்ணில் ஆனநத நீர் பெருக்கிக கொண்டு, ஸ்ரீ சஙகர பகவானின் பாதகமலஙகளை பிடித்து கணணிலும் மார்பிலும் ஒத்திக்கொணடு, "இன்றைககுத் தான் நான செயயும் குரு பணிவிடையின் முடிவை கண்டேன்!" என்று பலவாறக துதித்து நின்றார்கள். அப்போது மகனுனவன அதிகுதூகலமடைந்து சொல்லுகிறன்.

(வினதாசுத—மெட்டு)

ப, படத்தினுருவம் சடமிட்டதைபோல்
சூடமதுகண்டு—கழல கண்டேன் —பட
அ-ப, படத்தினுருவம் பலவாயிருந்த
சடமெல்லாமொன்றே எனகாட்டிடும்
—பட

ச, சாயம பலவித வேடம் கொண்டும்
காயமதை யறிந்து கழல்காணும்
கருணையருளொளியில் இருளொழிந்திடும
கருணை சுபரமணி ஜோதி-சேரும் —பட

வாயுவின் அவதாரமாகிய பிரபாகரரின மகன் துதிப்பதையும, அவனுடைய ஆத்மத்யானத்தையும் கண்டானந்தித்து ஸ்ரீ சங்கரர், தன் திருக்கரங்களால தட்டி, ஓ என் அருமை சிஷ்யா; நீயே "ஹஸ்தமலகர்" என பேரிட்டு அழைத்து சொல்லுகிறார்,

ஓ பிரபாகர பட்டரே, உம்முடைய குரு பக்தியே இவவிதம செய்தது உம்முடைய குலத்திலுதித்த இந்த ஹஸ்தாமலகர் பிறந்தது, உங்கள குலமே பரிசுத்தமாயிற்று. இனி இவனைப பற்றி உங்களுக்கு விசாரம்

வேண்டாம். நித்ய ஸ்தானமாகிய என்னிடம் சேரப்போகிறான். நீங்களும் சாஸ்திரங்களை முழுதும் உணர்ந்து, நம்பிக்கையே மிக மேலாகக் கொண்டிருந்தமையால், என் தரிசனம் உங்களுக்குக் கிடைத்தது இனி நீங்களும் வான ப்ரஸ்தாச்ரமம ஸ்வீகரித்து ஸந்யாஸிகளைபபோல பிரகாசியுங்கள் என்று சொல்லி அவர்களுக்கு உபதேசம் செய்து தன்யராக்கினார் பின்னும ஹஸ்தாமலகரின் அவதாரம் எப்படியென்றால் ஆச்சரியகரமாகும் அதையும் கேளுங்கள். பக்தாகளே, முன்பிறந்த குழந்தை மூன்று வயதாகவே, தாயுடன் ஆற்றின கரைக்குச் சென்று, தாய் குளிக்கும் வேளையில் குழந்தை தவறி ஆற்றில் விழவும், உயிர் துறந்தது. தாயும் இவ்வருத்தத்தை, அவ்விடம் தவம் புரிந்துக் கொண்டிருக்கும் யோகியினிடம படிந்து வணங்கி அழுகுரலுடன் இருக்கும்போது, யோகிக்கு மனமிரங்கி, அந்த இறந்த குழந்தையின உடலில் பிரவேசித்து, தன்னுடலை நீத்தார் ஆகையால, இந்த ஹஸ்தாமலகர் ஓர் யோகியாகும். தங்களு

டைய முனைவிருந்த குழந்தையல்ல! 'அது காரணம் பற்றியே இவர் பரம்பத்திலே மனதை செலுத்தி ஊமையைப்போல மௌன மாயிருந்தார். இது மிகவும் உயர்ந்த இர ஹஸ்யமாகும் அதற்கு தகுந்த குரு வரவுர, ஸந்யஸிக்க விடை கேழக, இவரிதம பரம்பத தையே பேசினார் ஆகையால இப்பாலனை வாயுவின் அம்சமென அறியுங்கள். நீங்கள் இதுவரையில் வளர்த்தினமையால தனயரா னீர்கள். இனி உங்களைபபோல கோடான கோடி தாய் தகப்பனுகளும் (பிதிர்க்களைய பிரகாசிப்பவர்களுக்கு) நித்ய நிராதததமிட ஸந்யஸிக்க போகிறான் என்று திருவாய் மலர்ந்து அருளி, தமபதிகளை ஆசிர்வதிக்கவும் பிரபாகர பட்டரும் அவர் தேவியாரும குரு நாதருடைய பாத கமலங்களை பிடித்து மார் பில் வைத்துககொண்டு உள்ளம் பூரிகக ஸ்ரீ சங்கர பகவானை துதித்தார்கள்

(ஷண்முகப்ரியா)

ப, ஹம்ஸதயானசீலா—ஹரே சங்கரா

—ஹமஸ

அ-ப, பரஹம்ஸகுரு பரமபவித்ரா —ஹம்ஸ
ச, எஙகுமனம் சென்றாலும் அங்கே
யோகமுறும்
பெருங்குமமுதாம் பொற்பதஸேவனே
தஙகருபஞான ஷண்முகபரியனே
மங்களரூப ஸ்ரீ சுப்ரமணி கிதனே
—ஹமஸ

இவவிதம் துதித்து ஸ்ரீ சங்கர குருநாத ரின பூரண அருளைப் பெறறுக்கொண்டு, தன மனையை அடைநது பக்தி பணணிக்கொண் டிருந்தார்கள பிறகு ஹஸதாமலகருககு தண்டு கமணடலம காவியுடை கொடுத்தருளி உத் தம சிஷ்யராக்கிக் கொண்டார் இதை கண்ட தேவர்கள் பூமாரி பொழிந்தாாகள.

ஓம் நம: பார்வதீபதயே
ஹரஹர மஹாதேவா

எலலாமுணர்ந்த ஹஸ்தாமலகா தன் குருவை வலம் வந்து நமஸகரித்து துதிக்கலா னா. ஓ கைலாஸ நாதா, உம்முடைய திரு கரங்கள் என்னுடலில் படவே, என்னை அறி

யாமல் என்னுள்ளததில் ஆனநதம் கிளம்பி நாவு பேசலாயிற்று ஓ அக்ஷய பிக்ஷையளித்த தயாநிதே, எப்போதும் உம்முடைய பாதார விந்த பஜனையை தந்து ஸதா நினைத்துகொண் டிருக்க அருளவேண்டும் ப்ரபோ,

(ஷண்முகப்ரியா—ஆதி)

ப, ஸ்ரீ சங்கரநாதா — சார்நதடி பணிநதேன்
—ஸ்ரீ

அ-ப, சங்கடம தீர்த்தென்னை மங்கள
மாகஇன—ஸ்ரீ

ச; ஆணவமாயையை பூரணமதிலடக்கி
ஆரணதேஹிபோ லருள்செயதாய்
பூரண புருஷ புணயர் தேடும நாதா
பூரக ஷண்முக பிரியதோழனே —ஸ்ரீ

இவவிதம துதித்து பதமபாதா முதலிய சிஷ்ய சகோதரர்களையும் வலம் வநது நமஸ கரித்து ஆசி பெற்றார்

சாநதி

## பதினொராம் அத்யாயம் முற்றிற்று

## ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீ சங்கர கீதை

---

## பதினைந்தாம் அத்யாயம்

*ஸ்ரீ சங்கரர் பிரமாதி தேவர்கள் துதிக்க கைலாஸம் அடைந்து எங்கும் ஜோதி ஸ்வரூபமாய் பிரகாசித்தல்.*

மகுடபதியை விட்டு சிஷ்யர்களுடன் ஸ்ரீ சங்கரர், காமதேனுவின் காதாம விளங்கும் கோகர்ணமடைந்து சில நாட்களைச் செய்து, பின் ஹரிஹர க்ஷேத்திரம், மூகாம்பிகை முதலிய புண்ய க்ஷேத்திரங்களை தரிசித்து, மறுபடியும் சிருங்க கிரிக்கு வந்து, வாஸம் செய்யலாயினர். பல்லாயிரம் சிஷ்யர்களுக்குப் பாடம் சொல்லவும், துறவு பூண்டவர்களுக்கு

தண்டு கமண்டலங்களைக் கொடுத்து உப தேசித்தும், ஒழுக்கம தவராமல் தருமததை நிலைநிறுத்திக் கொண்டும், எதிராஜஸிம்மமென சோபித்தார். அவ்விடம் ருஷ்யசருங்கர் இருந்துவந்த ஆசரமத்தையே, ஒரு மடாலய மாகச் செய்து, அவ்வூருக்கு ச்ருங்கர் வாஸம் செய்ததமையால சருங்ககிரி யென்று நாமமிட்டு அவ்விடம் சிறிது நாள் தங்கலாயினா

பின்னொரு நாள் பதமபாதா முதலிய சிஷ்யாகளுக்கு பாடம் சொல்வதற்காக எதத னிக்கையில், ஆனநதகிரி என்ற சிஷ்யர் வராமையால பாடம சொல்லாம லிருந்தாா இதைக்கண்ட பதமபாதா, "அநத ஆனநதகிரி எப்பவும் பணிவிடையிலேயே இருநதுகொண் டிருக்கிருா எஙகளுக்குப பாடம சொல்லுங களேன" என்றுா இதைக கேட்டதும் குரு நாதர், ஆனந்தகிரியின் பெருமையை இவனுக் குக காணபிக்கவேண்டு மெனறு திருவுளளம் கொணடார் பின் ஆற்றில் துணிகளைத தோய்த்துககொணடிருநத ஆனநதகிரி வரவும், உடனே ஸ்ரீசங்கரா, ஆனந்தகிரியின் முகத்தை

றோககி, "இங்குளது அங்கே வரட்டும்!" என்றார். உடனே ஆனந்தகிரி, பத்மபாதர் முதலியவர்களிடம் "துரோடகம்" என்றால் என்ன? என்று வினவினார் இதைக் கேட்டதும், அவர்கள அந்த திவ்ய வாக்கியத்திற்குப் பதில் அளிக்க முடியாமல் போனார்கள். ஆனந்தகிரி, குருநாதரை நமஸகரித்து சொல்லலானார் "குரு பணிவிடையின் பயனின்மூலம் ஸித்தியத்தை அடையும் மார்க்கமாகும்" என்று உரைத்து, குரு அருளால் துரோடகம என்ற பல சுலோகங்களைப் பாடி, துரோடகாசாரியார் என்று பேர்பெற்று, அன்று முதல் அவரும் ஓர் உத்தம சிஷ்யராக விளங்கினார். ஸ்ரீசங்கர முனிவருக்கு மாணாக்கரில் பல்லாயிரவருள் ஸுரேஸ்வரர், பத்மபாதர், ஹஸதாமலகர், துரோடகாசாரியர் இந நால்வரும நாலு வேதங்களாய் நாலு திககிலுமடைந்து, ஜயபேரிகை அடைந்து, விளங்கி, பல நூற்களையும் செய்தார்கள்.

ஒவ்வொருவருக்குத் தகுந்தபடி பாஷயத்தின் விரிததுரை செய்யவும், அத்துவித நூற்

கஜேச சமைககவும் உத்திரவிட்டு, தாயின் காமத்திறகாக தக்ஷிண தேசம் நோக்கி புறப் படடார். தன ஜனம பூமியை அடைநததும், தாயைக்கண்டு சொல்லுகிருர்,

(கல்யாணி — ஆதி)

ப, அநதி காலததிலுனனே—காணவே
வந்தேனமமா —அநதி

அ-ப; சொந்த சிவலோகம் நேரில கண்டிட
சாநதமுடன வநதேனம்மா —அநதி

ச, எந்த யுலகம் வேணடுமோ—அதை
எடுததுரைததால் அதை
வரவழைப்பேன்
சுந்தரமாக ஜோதி நீழல் தோனறியருள
கந்த பராக்ரம மாயென்னிடம் சொல்
—அநதி

தாயிடம் ஸ்ரீசஙகரர் இவ்விதம கேடகவே, எது நித்ய ஸதானமோ அதை காட்டுவாயாக'! எனறதும, தன் திருககரஙகளால் தலையில வைககவும், ஆகாயத்திலிருந்து திவ்ய விமானம் வரவும, தேவாகள பூமாரி பொழியவும

வைகுண்டத்தை அடைந்தார் உடனே தன் தாயிடம் சொல்லியபடி, தாயின் காமத்திற்காக, காலடி கிராமத்தில், காம சிலவிறகு யாசிக்க, "ஸந்யாஸிக்கு கர்மம புரிய அவசியமில்லை" என்று அங்குள்ள ஜனங்கள் சொல்லி ஒன்றும கொடுக்காம லிருந்தார்கள் இதைக் கேட்டு, பரசோகதம் கொண்ட ஸ்ரீ சங்கரா தாயைத் தூக்கிக்கொண்டு பூர்ணா நதிக்கரையில் வந்து, பச்சை வாழைமட்டைகளை வெட்டிக்கொண்டுவந்து கூட்டி, தாயை அதன்மேல் வைத்து, கமண்டல நீரைத் தெளித்து சொல்லுகிறார்

"பூர்ண சந்திர சூரியர்களைச் சக்கரமாகக் கொண்டு புரத்தை எரித்தத் தீயும், ராம தூதன் சென்று ஸீதையின் சோகமே அக்னியென பிரவாஹித்து ராவணனுடைய புரத்தை எரித்தக் தீயும், அடி வயற்றில் அன்னையிட்ட தீயும், ஆதியந்த மில்லாதப் பொருளை காண்பதற்கு நான் சென்றபோது ஜ்ஞானக் கண்ணுல் கண்ட தீயும் என்னைக் காப்பாற்றி, இந்தத் தாயினுடலை பரிசுத்தம் செய்யக் கடவது!"

என்று மொழிந்து கமண்டல நீரைத் தெளித்தார். உடனே வாழை மட்டைகள் எரிய ஆரம்பித்து விட்டது. இந்த ஆச்சரியத்தைக் கண்ட கிராமவாசிகள், ஸ்ரீ சங்கரரிடம் விபரீதம கொண்டமையால கிராமமும எரிய ஆரம்பித்துவிட்டது. யாவருமே பயந்தோடி ஸ்ரீ சங்கரருடைய பாத கமலஙகளில் வீழநது, க்ஷமித்தருளவேணடு மெனறு சொலலவும, அதறகு சங்கரா, இது என செயலல்ல? உங்கள கெடுதியே உஙகளை அடைநதது ஆகையால, இனி நான முடிபதநி மூன்றும் தலைமுறை சருஙககிரி படடததிறகு வருமபோது காலடியென்ற நாமதேயம விளங்கிவரும் என்று திருவாய மலர்நதருளி, தாய்ககு வேணடிய கர்மாதிகளை முடித்துக் கொண்டு, தேசாடணததிற்கு புறப்பட்டு, சௌரீமலை சாரபில வநததும், அவ்விடம் ஓர ஆனநதம் கிளம்ப, காடடு மிருகங்களை யெல்லாம் ஜெயித்து, எண்பததிரண்டு நாழிகை நடந்து, உச்சியில் ஹரிஹரபுததிரராய விளங்கும் திவ்ய மூர்த்தியை அஷ்டாங்கமுடன பிரதிஷ்டை செய்து பூஜிதது

நித்ய நைவேத்யம் முதலிய ஸகுணோபாஸனைச் செய்து துதிக்கிறா

(ரகுகுல நிதம—மெட்டு)

ப. ஹரிஹர புத்ரம்—சௌரீமலை வாஸம்
ஹரிப்ரம்ம தவசீலம்—சூர மயம் —ஹரி

அ-ப; பூரிநாத பரியம புண்யஹாந்த விலாஸம்
பஞ்சகோச ஹாரம்—ஹரிஹர ரூபம்
—ஹரி

ச, காமக்ரோதாதி ஹாரிணம்—ஸோம
சூரியாக்னி நேத்ரம்
சியாமள ரூப சிகரம்—சுந்தர ரூபம்
ஷடகுணாதீத மயம் ஷண்முக ஸோதரம்
ஸத் சுபரமணி கீதம் ஸாவஸித்தி ஸ்வ
ரூபம் —ஹரி

இவ்விதம ஸ்ரீஐயபபனை பாடி துதிசெயது விடைபெற்றுக் கொண்டு, பற்பல ஊர்களை அடைநது, பற்பல பிரஸங்கங்களை செய்து, மக்களுககு அத்வைதமே மேலானது என்றறிய பற்பல ஆச்சர்யபபடும்படியான ஸிததிகளை காண்பித்தும், காஞ்சீபுரமடைந்து காமகோடி

பீடம சமைத்து ஸ்ரீ காஞ்சீபுர வாஸினியாகிய காமாக்ஷியம்மையை நோக்கி பாடலாயிஞா

(ஸ்ருவுமசௌரிகா—மெட்டு)

ப; ஸ்ரீ காஞ்சீபுர வாஸினி காமாக்ஷி
சரணமடைந்தேன் சாந்தம கணடிட—ஸ்ரீ

அ-ப, கெஞ்சினேனுனையே கமுல் கணடிட
நெஞ்சுருகவே கொஞ்சும் பாதம காண
—ஸ்ரீ

ச, உன்னை அண்டினோருக்கு அன்னைபோல
வருவாய

தன்னையுமறிய நமபரம காணும்
ப்ரமமபுரியில வர்மமாகவே
பரமமாக்ஷரத்தில் ப்ரபையாயிருந்த - ஸ்ரீ

இவ்விதம் காஞ்சியில் ஸ்ரீ சககரமும் சமைத்து காமகோடி பீடமென கும்பகோணத்தில் ஸதாபித்தும், அவவிடத்திலிருந்து சிதம்பரமடைந்து ஸகுணோபாஸம் புரிந்து, அவவிடமிருக்கும் தீக்ஷதாகளின் கர்மஙகளை அடககி, நல்வழியை உணர்த்தி, யாவருக்கும் அதவைதத்தைக் காட்டி உபதேசம் செயது அறிவு

12

உடையவர்களாகினர் பின் அவ்விடமும் விட்டு பறபல ஊர்களை அடைந்து ச்ருங்ககிரி அடைந்தார் அபபால் பத்மபாதா, ஹஸ்தா மலகர், மணடன மிச்ரர், துரோடகாசாரியா, சாபிதுபாணி, சிதவிலாஸர், சுரேஸவரா முதலிய சிஷயாகளுடன ஸ்ரீ சஙகரா கைலாஸததிறகு புறபபட்டுசசென்று, கஙகை கரையில் சிறிது நாள் இருநதார் ஒருநாள், கஙகைக் கரையில சிஷ்யாகளுககு பாடமோதிக கொணடிருக்கும் போது, அபிநவ குபதர் என்ற ஒருவா் மந்திர ஸித்தியை அடைநதமையால், ஸ்ரீ சஙகரரிடம பொறுமைக் கொண்டு மூல வியாதியை உணடு பணணினார். இதை முறறிலும அறிந்த சங்கரா, கருணையுடனேயே இருநதாா சிஷ்யாக ளெல்லாம எவ்வளவோ வைத்தியம் பணணி யும் சுகப்படவிலலை யாகையால், அசுவனீ தேவாகள பிராமணர் உருமவாக வநது ஓர் மூலிகையை கொடுக்கவே, ஸ்ரீ சஙகரர், "ஓ பிராமணர்களே! சரீராபிமானம் உள்ளவர் களுக்கலலவோ வைத்தியம! நான் ப்ரம்மம்! எனக்கு எதற்கு?" என்று உரைதத சங்கரா

ரிடம் மாயா பிராமணர் இது உனக்காகவல்ல, லோக க்ஷேமத்தின் பொருட்டு கொடுக்கிறேன், உடகொள்ளும் என்றார் உடனே புன்னகை புரிந்து அந்த திவ்ய மூலிகையை உடகொண்டார். பின் அந்த மாயா பிராமணர், "இந்த வியாதி பொறுமைக்கொண்ட அபிநவ குப்தரென்றவரால வந்தது" என்று உரைத்து மறைந்தார

இந்த அற்புத வாக்கியத்தை கேட்டதும், ஸ்ரீ பத்மபாதருக்கு மனம் தாளாமல், இப்பொழுதே அந்தத் துஷ்டனை எரிப்பேன! என்றதும், ஸ்ரீ சங்கரர், வேண்டாம். சாந்திக் கொள், என்று சொல்லியும், பதமபாதருடைய உள்ளம் தாங்க முடியாமல, இவவிடமிருந்து கொண்டே எங்கும் நிறைந்த அறிவால் அந்தப பொறுமைக்கொண்ட துஷ்டனை எரித்து விட்டார். மற்ற சிஷ்யாகளெல்லாம பத்மபாதரின் ஆச்சரிய செய்கையை நினைந்து கொண்டாடினார்கள்.

அப்படியிருக்க மற்றொரு நாள், கபாலீகன் என்ற ஒருவன் பைரவ உபாஸகன் ! சிஷ

யர்கள் யாவருமில்லாத வேளை பார்த்து ஸ்ரீ சங்கரரிடம் வந்து வினவலாயினன். ஓ சங்கரரே!, நீர் சரீராபிமான மில்லாமலும், யாவும் ப்ரம்மமென்று உணர்ந்து இருக்கிறீர். எனக்குவோர் விண்ணப்பமிருக்கிறது அதை தெரிவிக்கலாமா? என்றான். இதைக் கேட்ட ஸ்ரீ சங்கரர் என்ன வேண்டுமோ அதை கேள் என்றார் அதற்கு கபாலிகன, ஸ்ரீ சங்கரர் பைரவ மூர்த்தி என்பதை அறியாமல, தங்களுடைய சிரஸ்ஸை என் உபாஸனா மூர்த்தியாகிய பைரவருக்கு வேண்டுமென்றான் உடனே சங்கரர், ஹா, ஹா, என்னுடல் அந்த பைரவருக்கு கொடுக்க பாக்யம் செய்தது போலும்! அவ்வளவுதானா வேண்டும்? சரி யாகட்டும்! நான் தியானத்தில் அமரும்போது எடுத்துக்கொள் என்றார். இந்த விதம் சித் முத்ரையுடைய ஸ்ரீ சங்கரர் கருணை உருவமாக "நான் ப்ரமமம்! என்ற மூர்த்திகளுக் கப்பால் ஸமாதி நிலையடைந்து நிஷ்டையிலமர்ந்தார் இதை அறிந்த கபாலிகன் கத்தியை ஓங்கி வரவே, கங்கைக்குச் சென்றிருந்த ஸ்ரீ பத்ம

பாதர் வரும்போது, கததியை ஓங்கி வரும் கபாலிகனுடைய எண்ணத்தை அறிந்து, உடனே மனம தாளாதபடியால மஹா விஷ்ணுவின அவதாரமாகிய பதமபாதர் நரஸிம்ஹ உருவம கொணடு இரைசசலுடன் இரணயனை சீநதி எறிநதனதப் போல, அநத துஷ்ட கபாலிகனை பிடித்து இழுதது சீநதி எறிநதார் இதை பாாத்தவர்களெலலாம் அசசபபடவும் அண்டங்கள ஏழும் நடுஙகி விடடது. பிறகு நிஷ்டை கலைநத சங்கரர் கண் களை திறந்து பாாககையில் நரஸிம்ஹ மூாததி நிறபதையும், கபாலிகன இறநததையும் பார்தது துதிககலாயினர்

ஓ என் ஆத்ம குஹையில் இருநது எனனை நடத்தி வைக்கும் ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்ஹ மூர்த் தியே, உனககு நமஸகாரம! இகபரமும் கடநது நாராயண ஸவரூபமாக விளஙகிக் கொணடு, தறபோது அடியேனுக்கு சீடனைப் போல அவதரித்த தயாநிதியே உனக்கு நமஸ் காரம்! எல்லாவித தொழில்களையும் உனக்கே அறபிதது எனனுடைய உடல பொருள் ஆவி

மூன்றும் உனக்கையில் ஒப்புவித்து "நான் தனிமையா யிருப்பவன!" என்று ஸதா நினைத்துக்கொண்டு, ஸாது வேஷமாக உலகத்தில் ஸஞ்சரித்து கொண்டிருக்கும் போது, பகவானே வந்து என் யோக க்ஷேமங்களை நடத்தி என் முன் விளையாடும் திவ்ய தேஜஸ் வியான மூர்த்தியே உனக்கு நமஸ்காரம்!

இவ்விதம் துதித்த சங்கரருடைய கருணைக்கிரங்கி, ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்ஹர் சாந்தம் கொண்டு எல்லா உயிர்களையும் இரக்ஷித்தார். யாவரும் ஸ்ரீ நரஸிம்ஹ மூர்த்தியை பூஜித்து சாந்தப்படுத்தவும், பழையபடி பத்மபாதராக கொண்டு குருவின் காலில் வீழ்ந்து சொல்லகிறார். என் குருநாதரே; உம்முடைய அருள் சாந்தியே என்னை நரஸிம்ஹ மூர்த்தியாக தோன்றச் செய்து, அந்தத் துஷ்ட கபாலிகனை கிழித்தது! என்று சொன்னார் யாவரும் பார்த்து அதிசயித்து, விஷ்ணுவும் சிவனும் ஒன்றேயாகு மென்பதை நேரிலேயே கண்டு, அஞ்சலி புரிந்து சிஷ்யர்கள் யாவரும் பூமாரி பொழிந்தார்கள். குருநாதரை வலமவந்து

அஷ்டாங்கம பண்ணி ஆசீர்வாதமும பெற ருர்கள்.

காசியை விடடு, கைலாஸததிறகு வருமபோது தேவாகள் துதிககிருர்கள

ஓ ஆதி சஙகரரே! இநத உலகில தோனறி மக்களை நறகதிககுப போக வழியைக காட்டி, பாஷயர்களும, பற்பல விதவான்களும, தாங்கள கொணட காவஙகளை ஒழ்ததது அவா களையும தனககுள் சோதது்கொணட தயா நிதியே! உமககு நமஸகாரம் என்று பறபல தேவாகள தோனறி, ஸ்ரீ சஙகரரை தரிசிதது, ஒவவொருவரும அவரவருககுத தகுநதபடி துதி செயதார்கள.

பிரமமா துதிககிருா! முன எஙகளுககு அபயம் கொடுதத கைலாஸபதி நீரேயாகும. லோக ரக்ஷணையின பொருட்டு மாய மனிதராக இருநது லீலைகளை புரிநத ஸ்ரீசங்கர பகவானே! நீரே தக்ஷிணு மூாததியின அவதாரமாகும். நீரே எல்லாமாய சோபிதது விளஙகிக்கொண் டிருப்பதை, நறமக்களுக்கு உரைக்கும்

பொருட்டு மாயா மனிதராய் அவதரித்த ஸ்ரீ சங்கர பகவானே! உம்முடைய ஐஸ்வர்யங்களும் தனயராளுர்கள். எனக்கு உம்முடைய திரு விளையாடல்களைக் காண, என்னையும் நான் மண்டன மிச்ரராக யிருந்து வாதம் புரிந்தேனை ஓ விரயாத சிரேஷ்டரே! வாதத்திஞல் என்னையும் ஜயித்தீர். பின் நாவிலமர்ந்த வாணியையும் ஜயித்து சாரதா பீடமாகக் கொண்டீர் ●தனபினை தன்னிடம் அக்னி கண் இருக்கிறதென்று காணபித்து, உக்கிர பைரவனை எரித்து, மக்களின் துக்கத்தை ஒழித்தீர்! நீரே மக்களுக்குத் தாயுமாவீர், தந்தையுமாவீர் ஓ லோக குருவே! நீரே இராபபகல்களை விளக்கும் சந்திர சூரியருடைய ஒளியாகவு மிருபபதையும் காணபிக்க பற்பல லீலைகளைச் செய்து, சிரஸில சந்திரனைக் கொண்டீர் என்னைக் காண்பவர்களுக்குப பாபமெல்லாம் நசித்து பரிசுத்தமாவார்கள் என்பதறகாக, சிரஸில் தங்க ஜடையினுள கங்கையைக் கொண்டீர் பின்னும் மூலபரகிருதியின் ஸவரூபத்தின நிழலை காணபிக்க, உமா தேவியை

தன் சரீரத்திலேயே கொண்டு, இருவரும் ஒன்ருயப் பிரகாசிக்கும்படிச் செய்கிறீர். ஓ, பரம சிவமே! உமமுடைய திருநாமங்களைப் பாடவும், உம்முடைய பாதாரவிந்த ஸேவையைச் செய்யவும், எனக்கு அருள வேண்டுமென்று பாடுகிருர்.

(கீலிகஜ்ஜணி)

1 சிவகுரு யருளபாதம் தவகுரு நேசர் பாதம
பவமதை திறக்கும் பாதம —சங்கரம்
பவமதை திறக்கும் பாதம.

2. முதலபொருள பாதம—முதலைக் கருள் பாதம்
முநியோர் துதி பாதம —சஙகரம்
முநியோா துதி பாதம.

3. குருமுகம கணட பாதம புருவமதில் கூடும பாதம்
குரு வடுவாம பாதம் —சங்கரம்
குரு வடுவாம் பாதம்

4. பெரு நீரடைதத பாதம - பெருங்குடை யளித்த பாதம்

பெருகவி பாடும பாதம் —சயகரம
பெருகவி பாடும் பாதம்

5. காசியில் வநத பாதம் - ஆசிபெறற பாதம்
ஆசிதரும் பாதம —சஙகரம்
ஆசிதரும் பாதம்

6 பதரியில் சென்ற பாதம் - சித்தர்க்கருள் பாதம்
சத்திரம் சமைதத பாதம —சஙகரம்
சததிரம் சமைத்த பாதம

7.. யோகியற் கரச பாதம - யோகாகனி வைதத பாதம்
மோகாகனி போககும பாதம் —சஙகரம
மோகாகனி போககும பாதம.

8. திருவேணி வநத பாதம - திருகூட வாஸ பாதம்
திருசிர வடவாஸம —சஙகரம
திருசிர வடவாஸம

9. அண்டமதை காதத பாதம - பிணடமதி விருநத பாதம்
கண்ட விபரருககருள பாதம் —சங்கரம்
கண்ட விபரருக்கருள் பாதம்.

10. பண்டிதருக் கருள் பாதம் - விண்டவருக
கருள் பாதம
வாணிககருளும் பாதம் —சங்கரம்
வாணிககருளும பாதம.

11 விட்டகனற ரச பாதம் - இட்டமாய வந்த
பாதம்
தட்டாமல வரும பாதம —சங்கரம்
தட்டாமல் வரும பாதம்.

12. சாரதா பீட பாதம் - சாநதயோக பாதம்
பணி பூஷண பாதம் —சஙகரம்
பாரதி தேவி பாதம்

13 பிணைதனை எழுபபும பாதம - குணதனைப்
போக்கும பாதம்
வரவேஷ சூர பாதம —சங்கரம்
வரவேஷ சூர பாதம.

14 தாய்க கருளும பாதம - வாழுதகண்
டெரிதத பாதம
சேயாய் வரும் பாதம் —சங்கரம
சேயாய் வரும் பாதம்.

15. தங்க ஸ்வரூப பாதம் - மங்கள ரூப பாதம்
தனனுலறியும் பாதம் —சங்கரம்
தன்னுலறியும் பாதம.

16. சுப்ரமணிக் கருள் பாதம் - சுந்தர ரூப
பாதம
சுப்ரகவி பாடும் பாதம —சங்கரம
சுடரமா யுதித்த பாதம்.

இவ்விதம் பிரமமா துதிககவும, ஒவ்வொருவர் அவரவர்களுக்குத் தகுநதபடி துதி செய்து ஆசிப் பெற்றூர்கள் பின பிரம்மா முதலிய தேவர்கள் துதிபபதைக கணட ஸ்ரீ சங்கரா, நெற்றியில் கண்ணும, சிரசில கங்கை யும், சந்திரனும், உடமபில உமா தேவியும், கழுத்தில் நீலமும், இடையில் புலியுடையுமா கவும், ரிஷபமாலது விமானம போல நிற்க வும், ரிஷபாரூடமாக ஏறி உடகார்ந்து, அவவிட மிருக்கும சிஷ்யகோடிகளுக்கு ரிஷபாரூடமாக காக்ஷி யளிதது, தேவாகள் பூமாரிப பொழிய, சித்தாகள் துதிபாட, மங்களம்! மங்களம!! என்ற ஒலியுடன், தன் ஸ்தாஸ்தானமாகிய

கைலாஸத்தை யடைந்து எங்கும் சோபித்துக் கொண்டிருக்கிறார் அவரை இன்றைக்கும் ஏக சித்தத்துடன் மனக் கண்ணால் பார்த்தால், அதன் உண்மையை நாமும் அறிவோம்! ஸ்ரீ சங்கர பகவான் இந்த விதமாகப் பூவுலகில் லீலைக்காக வந்து லீலை முடிந்ததும், தன் வீடாகிய கைலாஸ லிங்கத்தில் இரண்டறக் கலந்து எங்குமே சோபித்தார்.

சாந்தி

மங்களம்

ஓம் நம பார்வதீபதயே
ஹர ஹர மஹாதேவ
மங்களம் நிதய சுப மங்களம் -
சைலேந்திர நாதருக்கு - சுப மங்களம்
காலகாலாய கருணாஸாகராய-
பாலகுண தன்யாய பவித்ராய —மங்களம்
ரம்ய குண ப்ரபாய - லோசன வரதாய
கம்ய ஞானரூபாய - ரவிகோடி ப்ரபாய
விச்வ ஜன முகாய - சமீகறபவாஸாய
ஸ்ரீ சுப்ரமணி ஜோதி வரலீலாய
—மங்களம்

எங்கும் மங்கள ஒலியுடன் யதாஸ்தானத்தை அடைந்தார். இப்படிக்கு அடியேன் அருளியது ஸ்ரீ சங்கரருடைய கருணையாகிய ஆற்றின் நீரை சிறிது பருகினபடியால், ஸ்ரீ சங்கரர் தோன்றி, அருள்காட்டி இந்நூல் வரையப்பட்டது. இதில் ஏதேனும் குற்றமும் குறையு மிருந்தால், என் குற்றமே தவிர, சரித்திரத்தை குற்றமாக எண்ணக்கூடாது. பின்னும் இந்த சங்கர கீதையை எவ்வளவு வேண்டுமானாலும் மகத்தாய எழுதவும், அனுவாயெழுதவும் தகும்! எப்படியென்றால ஸேதுக்கு அணைக்கட்டும்போது அணில் மணலில் புரண்டு அணைக்கு உதவினதைப் போல, அடியேனுடைய அறிவிற்கு எட்டின மட்டும் ஓர் அணுவெனச் சமைத்தேன். எவ்வளவோ இதில் விட்டிருப்பினும் அதை பொறுத்தருள வேண்டுமென்று பகவானிடம் கேட்டுக்கொள்ளுகிறேன்

ஓம், சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

இப்படிக்கு ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்து அருளிய ஸ்ரீ சங்கர கீதை யைப் படிப்பவரும் கேட்பவரும் மரண காலத் தில் வியாதி பயமில்லாமல் ஸ்வர்க்க போகம் அனுபவிப்பார்கள் ஸ்ரீ சங்கர கீதையைப் படித்து மனனம் செய்பவர்கள் வைராக்கியம் விரைவில் கிடைத்து நித்ய ஸ்தானத்தை அடை வார்கள் சாந்தி

(நீலாம்புரி — ஆதி)

ப, ஸ்ரீ சங்கர கீதம் - சாந்தமாய பாடியறி
—ஸ்ரீ

அ ப; மங்களனே பரமானந்தனே—
அங்கமுடல முழுதும் ஒளிபரவ
தங்க மயமாய் தங்கிடச் செய்யும் —ஸ்ரீ

ச, ஆதிமுதல் கொண்டடிவரை யிலுள்ள
ப்ரூதியைப படித்தறிந்து பார மக்களுக
கெடுத்து ரைக்கு மெளிமையுடன் பர
மடுத்து பாடும்சுப்ர மணியருள்கீதம்-ஸ்ரீ

(ஆடும சிதமபரமோ—மெடடு)

ப, கூடுமானநதமே—ஸ்ரீ சஙகர கீதம —கூ

அ.ப, கூடுமானநதம கையை காட்டிடவே
கூடியே கீதையை பாடினாலுள —கூ

ச, சிதகனிகுண்டத்தில சுக்தவொளி வீசும்
மத்குஹையிலபர சுபரமணி காட்டி - கூ

சாநதி

## ஸ்ரீ சஙகர கீதை முறறிறறு

ஓம தத ஸத

## ஸ்ரீ சஙகராரப்பணம் அஸது

---

ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# ஸ்ரீ ஸ்தாசிவ ப்ரம்மேந்திராள் சரித்திரம்

அல்லது

# தியான சீலம்

# முகவுரை

ஹ்ருதய புண்டரீகத்திலே ஜீவனை அடக்கி ஸதா தன்மயமாக, அகண்ட காவேரீ தீரத்தில் நடனம் செய்துக்கொண்டு இருந்த ஸ்ரீ ஸதாசிவப்ரமமேந்திரருடைய கதையை எழுதுவதென்றால் அவ்வளவு சுலபமன்று. அவருடைய திருவிளையாடலையே கண்டுகளித்தால் அவர் அருள் சிறிது உள்ளத்தில் அடைந்து நம்மை சாந்திப்படுத்தும் மௌனபதை மட்டும் மறக்காமல் அவரை சிவமூர்த்தியாக எண்ணி பூஜித்து வரவேண்டும், என்பது என் அனுபவம். நான் ஒருநாள் காலையில் ஜபம் செய்துக்கொண்டு இருக்கும்போது திடீரெனவோர் ஒளி தோன்றி அதன் நடுவில் ஓர் மூர்த்தி நிர்மாணமாகவும் திவ்ய தேஜஸ்ஸுடனும் தோன்றி நிர்பதைக் கண்டேன் உடனே நான் ஸதாசிவம்! ஸதாசிவம்! என்று பல முறை சொல்லி பூஜித்தேன். அப்போது அந்த திவ்ய மூர்த்தியானது "அஹம்ப்ரம்மம்! அஹம் ஸதாசிவம்! என்று திருவாய்மலர்ந்த

ருளி அனுகரஹித்து மறைந்ததும், அடியேன் சிறிது நேரம் பிரஞையற்று அந்த ஜோதி நிழலில் அமர கிடைத்த ஆனந்தத்தைக் கொண்டு "ஸ்ரீ ஸதாசிவப்ரம்மேந்திராள் என்றே எனக்கு விளங்கிற்று. இந்த அனுபவத்தைக் கொண்டே அவரருளால் அவருடைய திருவிளையாடலை வரைந்தேன். ஏதேனும் குற்றமும் குறையு மிருந்தால் என் குற்றமே ஒழிய சரித்திரத்தை குற்றமாக எண்ணக்கூடாது.

சாந்தி

இப்படிக்கு,

**ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள்,**



தத ஸத
பரமஹம்ஸ
சாநத

ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திராள் சரித்திரம்

அல்லது

# தியான சீலம்

---

## கணபதி துதி
(பூபாளம)

முகதபொருளை யெபபவும கண்டுள மகிழ்நத
சிததராம் ஸ்ரீ ஸதாசிவேநதிரா கதையை
முததாய்கொழிந தருள் மோதக தரனுகவநது
சிததி ஓதித்து புததியை காட்டுவாய

### ஸரஸ்வதி துதி

பூதிகளை வீணையால் பாடி புண்யாக்கருளும்
ஆதியா யமர்ந்த அயனார் பததினியே
மதுரையி லுதித்த முகதர் சிவேநதிரர்
கதையை யுரைகக நாவில் வா

### குரு தியானம

(தோடி — ரூபகம)

ப, ஸற் குருவே சரணம, சாநதமருள - ஸற்
அ-ப, பற்பல நினைவை போககும் பரனே
—ஸற்

ச, முக்குணத்தா லுலகம் வாட்டுதே
நற்குணம் தந்தாள நாடியே யெனை,
பொறபதம காட்டி அழைதத
பொருளே
நேர்முக முடன சுபரமணிக் கருள -ஸற

### வசனம

அரும் பெரும் பாடல்களை பாடிய புலவர் கள் அருள் பெற்ற திவய க்ஷேத்திரமாம் மதுரையம்பதியிலே, ஸ்ரீ ஸோமநாத அவதானி யென்ற ஓர் ஆந்திர பிருமணர் இருநதார

அவருடைய உத்தம பத்தினியாளின் பெயா பார்வதி யம்மையாராகும். இவவாறு தம்பதி கள வாழ்நது வருகையில், புத்திர ஸந்தான மில்லாமையால் சோகமுற்று ஸ்ரீ மீனுக்ஷியம் மையை துதி செய்து, தபததால ஓர் குழநதை யைப பெறறாாகள. சநதிர பிம்பம போன்ற திரு குழநதைப பிறநததும், தேவாகள் புஷ்ப வாஷம் சொரிநது மஙகளவாத்யம் கோஷித்து, அவதார மகிமையை விளக்கினாாகள் இநதப் படி ஒரு நாளும பிறக்காதது ஒரிடததில் தோன்றும்போது எல்லாவித நற்குணங்களுமை நிறைந்து, ஈச்வர தனமையை விளககிக காட்டு மென்பதை நாம் அறிந்த விஷயமே வாம தேவர் கர்பத்திலேயே ஈச்வர மயமாகி விட் டார். சுகப்ரமம ரிஷி பிறந்ததுமே ஈச்வர ரூபமாகி விட்டாா. இவரைப் போன்ற அவ தாரமே நம் ஸ்ரீ ஸதாசிவவேநதிரர் என்பதை நன்கு விளக்கிக் காட்டுகிறது. பின்னும் மாயையோ, கர்மமோ, ஆணவமோ இவரிடம் கணடதே யில்லை ஒரே ஸச்சிதானந்த சுடர் போலவே அவர் திருமேனியும விளங்கிக்

கொண்டிருந்தது, அவதாரம் செய்த திருக் குழந்தையைப் பார்ப்பவர்கள் எல்லாம் தன்னுடைய பவரோக வியாதியை தீர்த்துக் கொண்டார்கள். இந்தப்படி தம்முடைய தபத்தால் பெற்ற குழந்தையை அருமையாக வளர்த்து வந்தார்கள் அப்படி யிருக்க.

(தனயாஸி இராகம்)

தவத்தை முனிகளுக்குப தேசிக்கவே வந்து
பவத்தை நீக்கி பராபர நிஷ்டை யுணர்ந்து
பலபிறவியும் பகல்கன வென்றுரைக்க
சீலமுடனவதாரம் சிவேந்திரராக வந்தார்

இவ்விதம் முனிகளுக்கு தியானத்தை உணர்த்தக் கூடியவராகவும், பல பிறவியை ஓட்டி சுடராயப பிரகாசிக்க வேண்டுமென தன்னுடைய லீலையால் தெரிவிக்கக் கூடியவராக, மதுரையில் ஸோமநாதா தம்பதிகளுக்கு திருக் குழந்தையாக அவதரித்து, சிவராம கிருஷ்ண னென்றும், அண்ணாவால் பிச்சுகுப்ப னென்றும் பலப் பெயருடன் விளங்கி, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ண

மாக மதுரையம்பதியில் வளர்ந்து வந்தார். தக்க பருவத்தில் யஞ்ஞோபவீத தாரணமும் செய்து, அத்யயன பாடசாலையில் சேர்ந்து வேதங்களை படித்து வந்தார்

(எந்தனிடது தோளும—மெட்டு)

1. அத்யய்யனம யாவும அணடியே படித்
தறிந்தார்

சித்த மான போதம் சின்மயமாகவே
ஸத்யஜ்ஞானம் கடந்த ஆனந்த ஸுகவும
நித்யமெடுக்கும் பிக்ஷானனமே புசிப்பார்

2 தாய தந்தைக் கெப்போதும தொண்டு
புரிவார்

நாயககுணமில்லா நயந்தே பணிவார
பாயும் புலன்களை போக்க யுபாயமுடன
சேயாகவே யிருந்து சித்தாக குணர்ந்திஞர்.

இவ்விதமாக பிரம்மசாயாச்ரமத்தை நடத்திக் கொண்டிருக்கும்போது, தாய தந்தையர்கள மணும செய்து வைக்க ஏறபாடுகள் செய்து வைத்தார்கள ஒன்றிலும பறறுதலில்லாத ஸ்ரீ சிவராமகிருஷ்ணன், கோயிலுக்கு வந்து ஸ்ரீ மீனாக்ஷி தேவியை துதிக்கலாஞர்.

(பியாகடை—அட தாளம)

ப, மூர்த்தி ஸ்வரூபியே—ஸ்ரீ மீனாக்ஷியே-மூ

அ-ப, கீர்த்தி பரதாபினி—கிருஷ்ண ஸோதரீ
பூர்த்தியான யோக நேத்திலைய
யருளே —மூ

ச, மலையத்வஜனுக் கருள் கனியாகவும்
சில விப்ரனுககு பரி யளித்ததும
புலவர்களின் நாவில் பொலிவுறறதும்
பலவர்ணமுமாக பால னெனககுமருள்
—மூ

இவவிதம் ஸ்ரீ மீனாம்பிகையை துதித்து, அனுதினமும் யாக யோகாதிகளை செயதும், யோகியரை தேடுதலும, மோகததைப் போக்கி யாவரையும் தெய்வமென பாராட்டி, அக ஸேவை செயதுகொண்டும வந்த, ஸ்ரீசிவராம கிருஷ்ணன், தனக்கு கல்யாணம் ஆனதையே மறந்து பிரம்மசாரியாகவே பிரகாசித்திருந தான். அபபடி யிருக்கும்போது ஸம்மந்திகள கல்யாணம் சொல்ல பெண்ணை அழைத்து வா வும், பார்வதியம்மையார் சமையல் வேலையி லமுநதி யிருந்த சமயம் பார்தது, சிவராம

கிருஷ்ணன், அம்மா பசிக்குதே! பசிக்குதே! என்று கூவினர் தாயாரோ வேலையில் மனதை செலுத்தி யிருந்தபடியினாலே கொஞ்சம் பொறுவென்றுள் இதைக் கேட்டதும் சிவ ராமகிருஷ்ணன் யோசிக்கலானார். கல்யாண மென்று வருவதற்குள் இவ்விதம் கஷ்டமானல கட்டிக்கொண்டால் எவ்வளவோ, துன்பம் ஏற்படும் ஆகையால், இனி நாம துறவு பூணுவதே நலம்! இந்தப் பற்றுதலே இவ் வுலகத்தில் முக்குணத்தால் ஜீவன்கள உழலு கிறது எப்போது இந்த பற்றுதலை விட்டு நீங்கி நிற்போமோ, அப்போது இந்த குணங் களு வாலாட்டாது, நம்முடைய தியான நிலை யிலேயே இருந்து ஆனந்தம் கொள்ளலாம் எனறு உருகி பசித்தவராய், ஓர் மூலையில் உட் கார்ந்துகொண்டு பரமனை மனதால் பாடு கிறார்.

(புன்னாகவராளி)

ப, பசியை போக்குமய்யா - மனதால்

கிளம்பும —பசி

அ-ப, புசிககவே யமுதம் பொற்பதமதிலே
கசிந்துருகி பருக கழல்தோன்றியென
—பசி

ச, வீண வாதும சூதுமே யுலகம
காணயென புரைக்குமுன்னே கண்டு
வெணகுடை மீதில வன்ன நதிருக்கும்
வெண்ணிலா வை வரகுஹையில் கண்டு
—பசி

இநதவிதம பசியைப போக்க பரமனை பாடி கௌபீனதாரியாக நிறைா இதைக கணனுறற தாயார் ஓடிவநது, ஏனிப்படி? நன்று யிருககிறது! ஸமமநதிகள பெணணை அழைதது வநதிருககிறாகளே! நீயேன இநத கோலம கொணடிருக்கிறுயே, என்று உரைத்து மகனை நோககி தாயார் சொல்லுகிறுள.

என அருமைபாலா, இநத கோலததை விட்டு நனறக இரு, நான் என்ன உனக்கு தபபிதமான வார்ததையை உரைததேன்? ஸம்மந்திகளுககு என்ன ஸமாதானம் சொல்வேன்? நீயோ தண்டபாணியைப் போல

வேடம் பூண்டு மூலையிலிருக்கிறாயே ; எங்கள் மனம் கோணாமல் இதுவரையிலும் நீ மங்க ளமாக தொண்டு புரிந்த பிச்சுவே, நீ இப் படி செய்வாய் என்று நாங்கள் கனவிலும் கூட நம்பவில்லையே ! என்று பலமுருக்கத்து டன் உரைத்த தாயாருடைய மொழிகளைக் கேட்டு சிவராமகிருஷ்ணன் உரைக்கிறான் அம்மா, எல்லாம் அறிந்த நீயா இப்படி புலம்புகிறாய் ? உனக்கு ஸந்யாஸத்தின் பெருமை தெரியாதா ? உன்னுடைய ஓர் சொல்லால் என்னை பரிசுத்தம் செய்து ஆண் டவனுக்கிறாறு அம்மா, இப்படி என்னை தங் களுடைய ஒரே வாக்கியத்தினால் துறவியாகக வேண்டுமானால், நீ உலக தாயாகிய ஈச்வரி யேயாகும். இப்படி தாயும் மகனும் பேசிக் கொண்டிருக்கும்போது, ஸம்மந்திகளும் அவ விடம் வந்துவிட்டார்கள். இதைக்கண்ட தாய் தயங்கி நிற்கவே, மகனாகிய பிச்சு, அம்மா ; நீ பயப்படாதே ! நானிருக்கிறேன் என்று உரைத்துக்கொண்டு சொல்கிறான் அம்மா, இந்த சடமாகிய உடம்பிறகு பற்றுதலுக்காக

மணம் புரிந்து இனபுற்று வாழவதைப் போல மனமாகிய பெண்ணுக்கும் தன முயற்சியால் நாதனை தேடவேண்டாமா? ஆகையால் நானிந்த விருப்பு வெறுபபான புறறு தலகளை விட்டு, மனத்தினை நாதனையே உள்ளததில தேடபோகிறேன். என்று உரைத்து தயானத்திலமர்ந்து விட்டார் சிலது நேரம கழிநததும் கண்களை விழித்து ஆநநத பாஷ்யமுடன பாடுகிறார்

(பியாகடை)

ப, தாய மயமே யுலகம் தான் நேரில்
கண்ட —தா

அ-ப; தாயமாரை மணம் புரியததகுமோ
மாயம் கடநதவாக்கொா தர்மமோ
—தா

ச; கோடையிலினைப்பாற குடைபிடித-
ததும்
ஆடையினுலுடம்பை மறைததும
முன்னம் கொண்டு வந்ததின்மேலின்-
வம்
மூடிமன்றக்க அறிவாளிக்கு தகுமோ
—தா

அமமா, இவ்வுலகததில் உலாவுமு ஸதிரீகள் முழுதும் ஸ்ரீயாகிய தாயாகும். அபபடியிருப்பதை தன அனுபவததால் கண்டும கூடவா மணம் புரியவேணடும்? நாம இநத உடமபிறகு எவவளவோ நிவாததியை செய்கிறோம! ஆனால் உடமபிற்குள இருக்கும் ஆதமாவிறகு ஆத்மாவாய விளஙகுவதை தேடினோமில்லை! முன்செயத புணயகாமத்தினால் இமமனித உடல தரிதது அறிவைகாண முயல வேண்டாமா? இனனும் தனனை மறைத்துக் கொள்வதா? சீ! சீ! இனி ஒருபோதும மாட்டேன நான் வந்தவழி எதுவோ அநத வழியாகவே ஆணடவன வீட்டை அடைய போகிறேன் நீஙகள யாருமதடுக்காதிாகள்! தடுக்காதிர்கள்! என்று உரைத்துககொணடிருக்குமபோது, தநதை ஸோமநாத அய்யர் க்ஷேத்திரத்தில் தரிசிக்குமவேளையாயிருந்தது. அவவிடத்தில ஸ்ரீ ஸோமஸுந்தரர் அசரீரி மூலமாக "நானே உன் மகனாக பிறநதேன்!" என்று கூறின ஆச்சர்யத்தை நினைத்துக கொண்டு வீட்டை நோக்கி புறப்பட்டு, இவர்

களிடம ஓடிவநதார உடனே மகனை பார்க் கவும் கோமணாண்டியாக நிற்பதை கண்ட, தந்தையாகியவர் ஸோமேச்வரா உரைத்தது சரிதான், என்று மொழிந்துக் கொண்டே மகன காலில் வீழ்ந்தார் பின் எழுந்து கோவிலில் நடநத விருத்தாநதஙகளை யெல் லாம உரைதது ஸமயநதிகளையும தாமயந்தி னியையும் ஸமாதானப்படுத்தி, தன் மகனாக வந்து திருவிளையாடுவது பகவானே, என்பதை உள்ளத்தில பதிய செயதாரகள்.

ஓ தர்ம பததினியாகிய தேவியே, நாம் முனனால் செயத தவபயனே இவவிதம நமமை இரக்ஷிகக உருவமெடுத்து வநதார போலும். அம்பரத்திலாடும் ஆதி ஜோதி மணி விளக் கின் நிழலை தந்தாள ஏழை அடியார்களை சோக்க வந்த அருள் தெய்வமே இவர் எனறு உறுதியாக கூறும் தந்தையாரின் மொழிகளை கேட்டு ஆச்சரியமடைநது யாவரும பிச்சுவின் காலில் வீழ்நதார்கள் அப்படியிருகக கல் யாண பெண் காலில் வீழந்து, கோமணாண் டியாக நிற்கும் தேவமுகத்தை பார்தது மன

முருகினவளாக கேழகலானுள. ஓ என் பிராண நாதா, எனனை இப்படி விடலாமா? ஏ பரபோ, அனுதியாக யென்னை துரததலாமா? என்று உருகி நாதனுககு நாதனுன பிச்சுவின் பாதகமலங்களை பிடிததுக் கொண்டு பாட லாயினுள்.

(முகாரி)

ப; என்னகான பிழை செயதே னீசா
எதுவும பொறுத்தருளும தயா
—என்ன

அ-ப, சின்ன வயதினிலே இநத வாதை வர-
லாமோ
முன்னம் செயத பராதபமோ அறி
யேன் —என்ன

ச, நாயகனில்லா நாரியருக்கெதும
நயந்த தொழில்கள் புரிவதாகாதே
எத்தனையோ பிறவியை எணணுது-
கழிதகேன்
அததனை போனுருவம் ஆதிசிவமாக-
யானுள் —என்ன

இதை கேட்ட ஸ்ரீ துறவி பூண்ட சிவ ராம கிருஷ்ணர், ஓ தாயே, நீ எழுந்திரு! அபயம் தந்தேன்! கவலைப்படாதே! நீயார்? சற்று யோசித்துப்பார்! நீ இந்த உடலா? உடலுக்கல்லவோ அபிமானமேறபடுகிறது? நீ உடலுககுள நிறைநதிருககும பரிபூர்ணம் என்று சொல! பேதயைபோல அழாதே! நீ என் தேவதேவியன்றோ! அபபடியிருக்க என காலில நீ வீழ்வதுகூட பிசகாகும் உணமையில் நீ ஓர் கநதர்வஸதிரீயாகும் முன் நாரதர் சாபத்தால ஓர் அநதணர பெண ணாக ஜனித்து, எனககு 12-ம் வயதிலும் உனக்கு ஏழாம் வயதிலுமாக என்னை அறி யாமல தாய தநதையர்கள எனக்கு மணம் செயது வைத்தார்கள் உனக்கு சாப விமோசனமாக நானே இப்போது நாரதரின் ஏவலாலே இவவிடம் வந்தேன் எனபதை அறி! என்று உரைக்கும் போது திடீ ரென ஓர் திவய ஜோதிகண்டு அந்த கல் யாணப்பெண கந்தர்வ ஸ்வரூபமாக மாறி மறைந்தாள். இதைகண்டும் கேட்டுமிருந்த

ஜனங்கள் யாவரும் பூமாரி பொழிந்து பிச்
சுவின பாதகமலங்களில் வீழ்ந்து ஆசிபெற்
றார்கள். இதனாலேயே நம பரம்மோத்திருள
பற்றுதலற்ற நிர்குண ஸ்வரூப மென்பது
நன்கு விளங்கும் நம குலத்தை பரிசுத்தம
செய்ய வந்த தீபசுடரே யாகுமென்று தாயா
ரும தந்தையரும துதித்து ஆசிபெற்றார்கள்.
ஸமமந்திகளும தன பெண்ணை கந்தர்வ
வடிவமாக்கி எங்கும் நிறைந்த பரம்பொருளை
காட்டும் பராசக்தி யென்று யாவரும் துதிக்க
கும்பாடி செய்தருளிய பிச்சுவின் காலில
வீழ்ந்து உபதேசம பெற்றுக்கொண்டு தன்
மனையை அடைந்தார்கள்.

பிறகு பால துறவியான ஸ்ரீ சிவராம
கிருஷ்ணன் தாயிடமும தந்தையினிடமும்
குருவை நாடி தேச சஞ்சாரம செய்யவிடை
கேட்கிறார். ஓ தாய தந்தையர்களே ? என்னை
பெற்றெடுத்த அருமை தவத்திலோத்தமர்
களே ! உங்களுக்கு எப்பவும் நான் உள்ளத
தில் இருப்பேனே ! கவலையுறுதீர்கள். உங்
களைபோன்ற எத்தனையோ தாய் தந்தையர்

கள நம குலததில தோன்றி மறைந்திருப் பவர்களுக்கும் எவலாவித தேவதைகளுக்கும் நிததியமான சிரார்த்தம் எதுவோ, அதை அடைய போகிறேன் எனறு உரைத்து தாயின் பாதகமலஙகளில் விழவே, எப்படியாறுலும் பெறறதாயிக்கு வருததம் வராமலிருகக முடிய விலலை ! மகன் யாததிரைககு போவதை நினைத்து கணகளில் நீர் தாரை தாரையாக் கப் பெருகினள. இதைககணட பாலதுறவி, தன திருகரஙகளால் தாயின் முகததை துடைத்து, ஸ்ரீ ஸோம ஸுநதரேச்வரருடைய ரூபமகொணடு நினறுர் இநத திவ்ய மூர்த் தியின் உருவததை கணடு ஆநநத ஸாகரத் தில் மூழகி ஹா ! ஹா ! என ஸவாமியே போய்வாரும் என்று கைககளை கூபபிக் கொண்டு விடையளிததது,ம, தன்னுடைய பால ரூபததை கொண்டு தந்தையிடமும் வநது விடைகேழகலாஞர்

ஓ என் அறிவை தநத பிதாவே ! தாயின் வருத்தத்தை நீக்கி ஆநந்திகக செய்து தங் களிடமும் குருவை நாடி புறப்பட விடை

கேழகிறேன நான் ஆத்மாநநதம் கொணடு உலகில் ஸஞ்சரிபபது உங்களுககு மிகவும் சிரேயஸைத தரும். காயிநதிரியை உபதேசித்த ஜஞானகுருவாகிய பிதாவே, இநத முக்குண வாஸனையை நீககி நிதயாநநதம கொளள வழியை தேடியறிவது நம்முடறசியல்லவா? ஆகையால் தஙகளுடைய பூரண ஆசீாவாதம தநது சிறுவனே காப்பாறறுவீர், என்ருா. இதைகேட்ட தநதையாா, ஒ சிவராமகிருஷ்ணு; உனககு பசிககுமபோது யார் சாதம போடுவார்கள்? இநத வயதிலேயே ஸஞசாரமபோக எததனிககிருயே? ஸாதாரணயாக மூனறு ஆச்ரமங்களும் அனுஷடிதத பிறகு ஸந்யாஸம கொளவது உலக வாழ்ககைப்படி நடககக்கூடாதா? இது நனமையா? என்று புததிரவாஞசையால சொலலும தந்தையை நோககி பாலதுறவி சொல்கிருர்

என்னை வளர்தத தந்தையே! கேளீா, உடலை மறநத பிக்ஷுககளுககு உலகெல்லாம் அன்னம் கிட்டுமென்பதை என யோகவலிமை

யால் அறிவேன். அபிமானமுள்ள ஆதமாக்களுககு பசியும் தாகமும உண்டாகிறது அபிமானத்தை விட்டவனுககு பசியும தாகமும் உணடாகும்போது எதேசசையா யாவும கிட்டுகிறது ஆகையால், நான எதேசசையாக கிடடுவதை உணடும, பனி வெய்யிலகளை கவனியாமலும், ஏகாமபர தயானத்திலேயே லயித்து நிவாணம் கொளவேனுக எனறூர்

இநத திவய வசனததைக் கேட்ட தநதையானவர், எனககு எனன கதிமைபக் கொடுககப் போகிருய? இப்பொழுதே போகவேணடுமென்கிருயே! என்ருர் இதைக கேடட சிவராமகிருஷ்ணர், நான யார தெரியுமா? சுப்ரமணியாகும. முனனல தநதைககு உபதேசித்ததைப்போல, உனக்கும உபதேசிபபனுக! எனறு உரைதது, அஷ்டஸிததிகளையும் பெறற பிசசுவானவர் ஸ்ரீ சுபரமணியாக வேலை தரிததுககொண்டு தநதைமுன் நின்ருர். உடனே தநதை ஆச்சரியமடைநது, "தன்னுடைய அஞஞான இருளை நீக்கி மெஞஞான வொளியைத் தந்த தயாநிதியே! நமஸகாரம்!

என்று பணிந்ததும், உடனே பால துறவி, தந்தைக்கு உபதேசித்து நற்கதியைக் காட்டி, விடை பெற்றுக்கொண்டு, கும்பகோணத்தை அலங்கரித்த பரமஹம்ஸ ஸ்ரீ பரமசிவேந்திரர் என்னும் காமகோடி பீடத்திலிருக்கும் பெரியாரை யடைந்து பூஜித்து, தன்னுடைய விருப்பத்தைத் தெரிவிக்கலானார்

ஓ ஸற்குரு ஸ்வாமியே! அடியேனுடைய அஞ்ஞானத்தைப் போக்கி ஞான சூரியனை உதிக்கச் செய்து, உள்ளத்தை பரிசுத்தம செய்ய உபதேசிக்கும் ஆதித்ய ஸ்வரூபராகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே நமஸ்காரம் கண்மணியாகள்போல வந்த என் சென்னியில் கால வைத்தருளும் கிருபாநிதியே! எத்தனையோ பிறவியில் முயற்சித்து தற்போது ஸற்குருவின் அருளாலே நித்யானந்தம் கிட்டுகிறது என்பதை அநுபவத்தால் உணர்ந்தும் தத்வாதீதமே நமஸ்காரம் அடியேனை ஏற்றுக்கொண்டு தொண்டாற்றுக்குவது உன் பாரமய்யா ஸ்வாமி! என்று ஆனந்த நீர் பெருக்கிக்கொண்டு, ஸற்குருவின் பாதகமலங்களில் வீழ்ந்து பாடுகிறார்.

(பியாகடை)

ப திருவடியை தேடி வந்தேன - திவ்ய
குரு நாதா —தி

அ-ப, குருவடிவாய காம கோடிபீட மதில்
உருவமா யுதித்த ஸற்குருநாதா நின
—தி

ச, தன்னை யறியாமலு ழன்றேன -
தவத்தால
முன்னம் முயற்சியால வந்தேன்
மாயம் பிறக்குமிடம் அறிந்திடவருள
மாதவ குருநாதனை தேடி வந்தேன —தி

இந்த திவ்ய பாடலைக் கேட்ட ஸ்ரீ பரம சிவேந்திரா நிஷ்டையி லமாந்து சிலது நேரம் கழித்து கண்களைத் திறந்து, கோவணுணடியாக நிற்கும பிச்சுவைக கண்டு, ஓ ஸதாசிவமே! என்று உரைத்து, மார்போடணைந்து ஆசிகூறினார் இதைககண்ட தேவர்கள் அந்தர் முகத்தில் தோன்றி பூமாரி பொழிந்து, நக்ஷத்திரஙகள் சுற்றின சந்திரனைப்போல சோபிக்க செய்தார்கள். உடனே சிஷ்யனை உள்ளே

அழைத்து வந்து குருவானவர், சீடனுடைய தியான நிஷ்டையைக் கண்டு புகழ்கிறார்

(பந்துவராளி—ஆதிதாளம்)

ப. அகண்ட தியானசீலா - ஆதிபுருஷனே
நீ —அ

அ-ப. முகண்டமேல் வளர் சுகஜோதிநிலாவில்
—அ

ச. எத்தனையோ பிறவியில அத்தனை
சேவையால்
பதத்தைப்போல யின்னாளிலென்னிடம்
வந்த —அ

ஓ அஞ்ஞானத்தைத் தன ஞான வொளியால் போக்கின சீலா, நான் அவ்வளவு பெரியவனா? இந்த ஜீவனுகிய ஸம்ஸார கடலில் ஆழ்ந்து முழுகி பொங்கி யிருக்கும் என்னை, கரையேற்றும் கருணைவள்ளலே, நான் உம்மை ஸற்குருவாக தேடும்போது நீரே இப்படி திருவாய்மலர்ந்தருளும்போது, அது அப்படியே சதாசிவமாகி, ஜீவன் முக்தனுக விரும்பி உம்மை சரண மடைந்தேன் சாந்தியில்லாத

மந்திரங்கள் இல்லாதததுபோல, குருவில்லாத சிஷ்யனும் இல்லையல்லவா? ஆகையால், எனக்கு நிர்வாணத்தின் பெருமையை உரைத்து உபதேசிக்க வேண்டும், பிரபோ! எதை அடைந்தால் ரூபம், நாமம், ஆத்மம், இந்த மூன்றையும் கடக்க முடியுமோ அதை உபதேசித்தருளி கிருதார்த்தனாக்கவேண்டும் குருவே! உப்பு பதுமை கடலில் போட்டால் கரைவது போல, இந்த உடலாகிய உப்புப் பதுமையை தங்களுடைய பாதாரவிந்த கருணை ஸமுத்திரத்திலே கரையும்படி செய்தருள வேண்டும் என்ற திவ்ய வாக்கியத்தை கேட்ட குருநாதர், சிலது நேரம் தியானத்தி லமர்ந்து, பிறகுத தெளிந்து பால துறவியாய நிற்கும பிச்சுவினிடம சொலலுகிறார்.

ஓ என் அருமை சிஷ்யனே கேள்! இது வரையில் என்னிடம இவவித திவய வசனங்களை யாருமே உரைததிலலை! நீயோ எனக்கு உபதேசிக்கும தக்ஷிணாமூர்த்தி யென்றே நான நம்புகிறேன. அப்படியிருகக நான உபதேசிப் பது தகுமா? என்றார் இதைக்கேட்ட பால

துறவி, எனக்கு எல்லாம் குரு மயமானபடி யால் உபதேசித்தருளி சீடனாக்கிக் கொள்ளு மென்றார்.

சீடனின் குருபக்தியைக் கண்டு ஸ்ரீ பரம சிவேந்திர ஸந்யாஸத்தின் இயல்பை உரைக்க லாயினார் உன் ப்ரீதியின் பொருட்டு உப தேசிக்கிறேன் கேள்

(புன்னாகவராளி—ஆதி)

ப. நீயே எல்லாமாகிறாய் - நேரில
கண்டுணர —நீ

அ. ப. நாயேன் என்னுடைய பவமாயுணர்ந்து
சேயாயுள்ளோரையும் கமலமதில் —நீ

ச. நீ யாரென்று நினைத்து விந்த நாரங்களை
பாயாய சுருட்டி பணியும்படி வந்த
நிழல்
அருளாகும், இருளாகும், உருவாகும்,
பொருளாகும் —நீ

2 ஈரேழுலகமும் ஈசுவர மயமென்று
நேரே கண்ணுகுயத்த காலறிந்திட
வரமாகும், இரவாகும், பகலாகும், அகம்
தோணும் —நீ

3 மாயமாய வநதுநின்ற காயாபுரியை ஜயிக்க
தாயாகக் கண்டு பெண்ணை தன்னையும்
ஜயித்து
யோகமூறும, யாகமாகும, தியாகமாகும,
முகம் காண —நீ

ஓ ஸதாசிவா! கேள். எலலாம் நீயே தான. இநத நான்! நான் என்பதை விட்டு, நீயே நடத்துகிருய், நீயே செயவிககிருய், நீயே எலலாருடைய உள்ளத்திலும புகுந்து நிற்கிருய! என்று மமதை அறறு நிஷ்காம்யம் புரியும்போது, ஆதம யோசனைககுக் கொண்டு வநது விடுகிறது அதாவது, நீ இநத உடலாகுமா? அல்லது உடலுககுள் இருககும் இநதிரயங்களாகுமா? ஒன்று மில்லாததாய் முடிவில எல்லாம் நாளுகவே முடியுமலலவா? இதை நீயும அறிநதிருபபாய இபபடி வேதாநத விசாரம் செய்வது மனதைக காணும் விதமாகும் மனதைக் கண்டு ஞான வடிவமாக்கி ப்ரம்மததில ஏகாக்ர சிததததால் சேர்ககுமபோது அகனி யுணடாகிறது. அநத

நிலையே எப்போதும் தியானமாக அணிந்திருப்பதே காவி உடையாகும் கடலினை அடைக்கும்படி திட்டப்படுத்துவது எதுவோ அதுவே கமண்டலமாகும் எப்போதும் ஏகசித்த தியானமே புரிந்து வருவது ஏகதண்டமாகும். எதை உத்தேசித்தும் பயனை கோராமல் கர்ம யோகம் புரிவது தியானமாகும் ஸந்யாஸமாகும் எப்போதும் உடலை மறந்து திவ்ய ஜோதி நிழலிலேயே அடைந்து, கரைந்திருப்பது ஸமாதி யோகம், இதை எல்லாவற்றையும் கடந்தது ஸதாசிவ வெளியேயாகும். ஓ ஸதாசிவபரம்மமாகவே பிரகாசிக்கப் போகிறாய் என்று திருவாய் மலர்ந்தருளி, மஹா பிரணவ மந்திரத்தை காதிலோதி திவ்ய நேத்திரம் காட்டி, அக்ஷய பிக்ஷை அளித்தார். உடனே தேவர்கள் பூமாரி பொழிந்து ஆசீர்வாதம் செய்து, ஸ்ரீ ஸதாசிவேந்திரர் எனப்பட்ட பெயரும் கொடுத்தருளினார் குருநாதர்.

உடனே ஸ்ரீ சிவேந்திரர் குருவினுடைய பாதகமலங்களில் வீழ்ந்து பாடலாயினார்.

(கோடினதுலு—மெட்டு)

ப, கோடி சூரியா கூடும குலைஹறயை
கூட்ட - அருள்செய்த குருவே —கோ

அ-ப, பாடுடும சித்தர் பரமதில நின்று
கூடிட ஆனந்த முகதாகளை கண்டு
—கோ

ச, அங்கம தளர்ந்துவர தங்கம வளர்ந்து
வர
பொங்குமானந்த கடா செங்கமலமதில
எங்கும ஸ்ரீசுபர மணிவொளி வீசிட
தங்குமபடி யருள தயாநிதி குருவே
—கோ

இந்தவிதமாக ஸ்ரீ குருநாதரை துதிதது அவா அருளையும பெறறுககொணடு குருகுலத திலேயே தங்கலாயினர். ஸ்ரீ ஸதாசிவேந்திரர் ஆழ்நத நமபிக்கையுடன குருவுககு தொணடு புரிநது வந்தார. பரம சிவேநதிரரை, இனிய சொறகளாகிய இவருடைய மொழிகளானது அடிக்கடி ஸமாதியுறச் செயதது அப்படி யிருக்க பிரபல வித்வானகளோ அல்லது வேதாந்த சாஸதிரிகளோ அவ்விடம் வந்தால,

போட்டியுடன் பிரட்டி அடித்து, தான ஜய பேரிகையுடன் விளங்குவார் அப்படியிருக்க, இந்தியா முழுதும் பற்பல ஸபைகளை கண்டு, போட்டி போட்டு ஜயபேரிகையுடன் வரும், வேதாந்த சிங்கம ஸ்ரீ ஸ்ரீனிவாஸ அய்யங்கார் என்ற பெரியார் எதிரிகளையும ஜயித்தவராய காமபீடம் அடைந்தார்

ஸ்ரீ ஸற்குருவாகிய பரம சிவேந்திரா, வித வானகளைக் கண்டால் ஆசி கூறி அழைத்து, நலவரவு கூறி, பிரஸங்கம் செய்வித்து தக்க ஸம மானம கொடுப்பதும வழக்கமாயிருந்தது ஸ்ரீனிவாஸயயங்காரை அழைத்து பிரஸங்கிக்க உத்திரவளித்து, தானே தலைவராகககொண்டு, ஸ்ரீ ஸதாசிவேந்திரரையிம், சிங்கம் ஸ்ரீனிவாஸ அய்யங்காரையும் வாத பலத்தை விருத்தி, வாதம செயய ஆரமபிககலாமென்று உத்தர விட்டார்கள்.

குரு ஸ்ரீ பரம சிவேந்திரரை நமஸகரித்து ஸ்ரீனிவாஸ அய்யங்கார் பிரஸங்கிக்கலாயினர்

ஓ ஸற்குருநாதா! நானென்ன இந்த கொலுவிலிருக்கும் முனீச்வரர்களிடம் சொல்லப்போகிறேன்? ஒன்றுமில்லை ஆனால், ஏதோ எனக்குத் தெரிந்தமட்டும் சொல்லுகிறேன், கேளுங்கள், ரிஷீச்வரர்களே! இந்த உலக சக்கிரத்தில் அகப்பட்ட மக்கள், நற்கதியை அடையவேண்டுமென்றே நம் ஆச்சாரியர்கள் தோன்றி வழியைக் காட்டினார்கள். இவ்வுலகம் வெறும் மணற்சுங்கட்டி என்று நினைத்து பரந்தாமனை அடையும்படி வேள்விகள் செய்து வரவேண்டுமென்று உபதேசித்து, பல பீடங்களும் சமைத்து நம் தக்ஷிணாமூர்த்தியின் அவதாரமாகிய ஸ்ரீ சங்கர பகவானை எப்பவும் தன்னுள்ளத்தில் தோன்றச் செய்து, உயிரால் நமஸ்கரித்து தியானித்து அவர் அருளால் சில வாக்கியங்களைச் சொல்லுகிறேன் கேளீர்! கேட்டு என் குற்றத்தை நீக்கி ஆட்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அப்படிச் சொன்னதும், ஸ்ரீ சிவேந்திரர் கேழ்க்கலானார் ஓ வேதாந்த கேஸரியே!

கேளும் அடியேன் தன குருவுக்கு தியானபூர்வ மாக உரைக்கும் திரு பாடலை பாடின பிறகு தயவு செய்து பிரஸங்கிககலாம் என்று உரைத்து, தன ஸங்கீதப் பாடலை பாடலாயி ஞர், "இவருடைய ஸங்கீததனைதக கேழகக ஈாரதருஙகூட பிரமை கொளவார்!" என்று பரம சிவேநதிரரே சொல்லியிருக்கிறார் கேழககும் மனிதாகள எவ்விதம ஆனநதம் கொள்வார்கள் என்பதை கேழககவேணடுமா?

ஸ்ரீ சிவேநதிரா பாடுகிறர்.

(வானதகின மீது—மெட்டு)

1. ஜோதி மணியைக கணடேன ஆதி குருவை கணடேன்
பாதி சந்திரனே - கூடினேன
வேதியரை கண்டேன் —ஜோதி

2 வீதியாம் வேதாநதம் பூதிகளை கணடேன்
மாதிளம் கனியாக - பாடினேன்
உதிக்கும் நிலாவாக —வீதி

3. பலவிதமாக சிந்தை பாரிலுழலாமலே
வேலவனைகவே - கூடினேன்
சில குணமாகவே —பல

4 குருவை யடைந்து ஸேவை செயவதே
கடமை

குருமயமாக - பாடினால
அருள ஜோதிதனை விழுங்கும.

இவவிதம் பாடியதைக் கேட்ட ஸ்ரீ குரு நாதரும், ஸ்ரீ வேதாந்தசிங்கமவர்களும, மற றும் பல பிரமுகாகளும் தியானத்தி லமர்ந்து விட்டார்கள சிலது நேரம கழிந்து கண்களில் ஆனநத நீர் பெருககிக்கொணடு, "ஹா! ஹா! என்ன இனிமை! இன்னொரு பாடல்கூட பாடவேண்டு மென்றாகள.

அப்படியே ஆகட்டும அதிதிகளையும், நம் அருள குருநாதரையும் ஆனந்திககச் செய வதைவிட, அடியேனுக்கு வேறு என்ன இருக கிறது? இதோ பாடுகிறேன் என்று சொல்லி ஸபையை வணங்கி ஸ்ரீ சிவேந்திரா பாடுகிறார்.

(கலயாணி—ஆதி)

ப, ஸ்ரீவர பீடமாம் காமகோடி
வரத காமாக்ஷிதாயே பாதம் தருவாய்
—ஸ்ரீ

அ.ப, ஸ்ரீ ஸோமேசா ஸுந்தர யுடம்பில்
சிறபர ஜோதியாய் அடைந்த தேவி
—ஸ்ரீ

ச, பஞ்சபூத சேர்க்கை பராபரமதில் வந்து
பஞ்சன மறக்க பேணி பாராதத்திரந்து
திருகோண சகர நிலநீ திருபுரசுந்தரி நீ
திருதாபஹாரிணி தயாநிதி கருணாகரி நீ
—ஸ்ரீ

இதைக் கேட்டதும யாவரும ஆனந்தம் கொண்டார்கள் பிறகு வீரசிகாமணியாகிய ஸ்ரீனிவாஸ அய்யங்கார, "இவர கர்மத்திறகு சேர்ந்ததா ஒர பாட்டு பாடமாட்டாரா?" என்று உளளததில நினைத்ததைக கண்ட ஸ்ரீ சிவேந்திரா, கர்மததிறகு சோந்ததான பாடலை பாடலாயினர்.

(பியாகடை—அட தாளம)

ப; காமமே யுலகம் காமினியால் நிறைந்த
—கர்ம

அ.ப; கர்மே மறிந்தால் வானுல கெல்லாம்
கர்மாதிகாரமெல கண்ணைப் காட்டும்
—கர்ம

ச, உலக ஸேவை புரிந்து வருவதும்
அலக விஸ்தாரம காட்டிடவும்
உள்புறமு மெலலாம் - ஏகசித்தமா
தனக்கென வாழா தொழில புரிநதறி
—கர்ம

காமினிகளால நிறைந்த இவவுலகத்திலே புலன்களால் மயங்கித தவிக்காமல, ஸறகுரு வின பாதஸேவையால கர்மாதியாக வேள்வி களைச் செய்து பறறுதலை விட்டு உள்புகுநது இருக்கும விஷ்ணு ஸவரூபததை அறிநது, பிரம்மததைபபோல பிரகாசிக்க வேண்டும. எதுவும தனக்கென்று செயதுகொளளாமல யாவும் ஈசவராாபபணம செயவதே உததம அதிகாரிகளின கடமையாகும என்று உரைதது விட்டு உபநயாஸததிற்கு வநத வீரசிகாமணி யாகிய ஸ்ரீனிவாஸ அயயங்காரிடம் சொலல லுற்றார். ஓ வேதாநத கேஸரியே! "தததவமஸி எனற மஹா வாக்கியததைக் குறித்து தாம விரோத மில்லாமல் தாத்பர்யம் கூறி விளக்கிப்போமாக! என்று உரைதது, இருவரும் உட்கார்ந்தார்கள்.

ஸ்ரீனிவாஸய்யங்கார் பிரஸங்கிகலாயி னர்.

"தத்வமஸி! என்ற மஹா வாக்கியத்தை விரிதுரை செய்வதெனறல அவ்வளவு சாமான்ய மன்று இருந்தாலும்," என்றால் அறிந்தமட்டும் சொல்லுகிறேன் அதாவது, "அது நீயாகிருய்!" என்ற பதத்தை குறிக்கிறபடியால், "நீயே பிரம்மம்! அஹம் பிரம்மாஸமி! என்றும் சொல்லலாம் பின்னும், இந்த இருப்த்தினன்கு தத்துவங்களால் சேர்த்தினகூட்டில் அமர்ந்திருப்பதை அறிவது, காண்பது கண! அதுவே தத்வமஸி! இப்படி தன்னுள்ளத்தில சரீர தத்துவஙகளை கடந்து எவன், கண்ணு யமர்நததை பார்ப்பானே அவனே மனிதரில் கண்ணுடையவனுவான். பின்னும, "தத், த்வம - அஸி" என்ற மஹா வாக்கியததிற்கு, அது அது, என்று சொல்வதை கேழககும்போது, அது என்பதைக்கொண்டு எல்லாம் பூதங்களாகவே கூறலாம். அதற்குள் இருக்கும் ஆதமா நீயாகிருய்! என்று சொல்லலாம். இப்படி அறிந்து "அஹம் பிரம்மாஸமி"

என்ற வாக்கியமானது, "நான் ப்ரம்மமாகி றேன" என்ற பதமே அதற்கு ஸாக்ஷியாக இருந்து லயமாகும தன்மை கிட்டுகிறது என று உரைத்ததைக் கேட்டு ஸபையோர்கள் யாவ ரும் ஸந்தோஷ மடைநதாாகள் உடனே ஸ்ரீ சிவேநதிரா உரைககலானார்.*

ஓ வீரசூடாமணியே! வேதாந்த கேஸ ரியே கேளீர். "அஹம பரம்மாஸமி" என்று அடைநது லயமாகுமபோது, தானே மாங்கனி யை அனுபவிததவனுகிறு னல்லவா? ஸபை யோர் காண, தான் மட்டும ஓர ருசியுள்ள வஸதுவை புசிக்கலாமா? அதை இன்னும் பல பேர்களுக்கு பங்கிட்டு கொடுதது, மீதி இருப்பதை தானும் புசித்து ஆனந்த ஸாகரத் தில் மூழ்கவேண்டும் அதறகாகவே ஆசாரி யர்கள தோன்றி, தாம் தத்துவததின் கண்ணி லிருந்துக்கொண்டு; தான் "தத்வமஸி" என்ற நிலையிலிருந்து மக்களுக்கு உதவி புரிநது மாங்கனியின் ருசியைக் காட்டினர். பிறகு, "அஹம் ப்ரம்மாஸமி" என்ற ஆழ்ந்த சிந்தனை

யைக் கொண்டு, கண், மூக்கு, நாவு, காது சரீரம் முதலிய இந்திரியங்களை, உப்பு பதுமை நீரில் கரைவது போல, ஞான கங்கையில் கரைந்து எங்கும் சோபிக்க வேண்டும். அது தான், "அஹம் ப்ரம்மாஸ்மி" இது இட்டு தற்கு வழி தத்வமஸிதான் முதலிலேயே ப்ரம்மத்தில் கரைந்து விட்டால மக்களை நற் கதி வரச்செய்வது எப்படி? இளி கூட்டில இளி இருப்பதைப்போல லீனத்துக்கொண்டு, உள்ளத்தில் பரமாத்மாவை இளியாக நிறுத்தி, சரீரத்தை கூடாகப் பார்த்துக்கொண்டு, அதி காரியாக உலகத்தில் பற்றற்றவனாய் இருந்து, நற்மக்களுக்கு போதனை செய்து நல்வழியைக் காட்டுவதற்கு "தத்வமஸி" ஒன்றே நமக்கு விடை என்பதை நாம் அறிவதே ஆதி சங்கர ருடைய அருளாகும். பின்னும் "அயமாத்மா!, ப்ரஞ்ஞானம ப்ரம்ம!" என்று உரைப்பதெல லாம், நாம் திவ்ய ஜோதியில் கரையும்போது எல்லாம் ஒன்றுகும். இது என் அனுபவம் என்று உரைத்துக்கொண்டு பாடலாயினர்.

(வினதாகுத—மெட்டு)

ப; ஸர்வமும் நானேயென்று ஸதாயறிந்து
பாவதம போலசையாதிரு மனமே
—ஸர்வ

அ·ப, நீர்வளமுமெலலாம தானென்றுணர
பாருமபரமுமெல்லாம் பார்க்கவந்திடும்
—ஸர்வ

ச; அநேகவிதமாய அடைந்த ஜீவிகளை
ஸ்நேஹிதாளென சாந்தமாயிரு
பிரேரணையுமில்லா பிரேமையா
யிருக்கும்
பிரேமையறறுசுப்ர மணிஜோதி
சேர்நது —ஸர்வ

எபபொழுது உள்ளததில ஸர்வமும நானே என்ற வாகயம எழும்புமோ, அப் பொழுதே பாறையைப்போல அசையாமல் தியானததி லமாந்து நிஷ்டை கொள்வான். பிறகு எல்லா உலகத்தின கணக்கும் பார்க்க தானுக வரும் ஜீவிகள் எவ்விடமிருந்து பிறக் கின்றதோ அந்த மூல ஸதானத்தையே அடை வோமாக என்று ஸ்ரீ சிவேநதிரர் அருளிய வச

